ஆதிசங்கரர் அருளிய

# பஜ கோவிந்தம்

4-2

விளக்கவுரை :

சக்கரவர்த்தி ராஜகோபாலச்சாரி

(ராஜாஜி)



வானதி பதிப்பகம்

13. தீனதயாளு தெரு

தி.நகர், சென்னை-17.

4-2

# அணிந்துரை

உபநிஷதங்களின் வரிசையில் வைத்து மதிக்கத் தக்கது பஜகோவிந்தம். ஆதி சங்கரர் ஏற்றிவைத்த அமரதீபம் அது. பக்தி வழியில் நம்மையெல்லாம் இட்டுச் சென்று பயனடையச் செய்யும் பவித்திர மான நூல்.

இதற்கு அற்புதமாக விளக்கவுரை எழுதி உபசரித்துள்ளார்கள், ராஜரிஷியாக விளங்கும் ராஜாஜி அவர்கள். அவர்கள் ஒரு சத்திய விளக்கு. இறைவன்பால் கொண்டுள்ள அசைவிலா நம்பிக் கையாகிய நெய் பற்றற்ற பணியாகிய திரிவழிப் பாய்ந்து, மெய்யறிவாகிய ஒளியைத் தந்து கொண்டேயிருக்கும் நந்தாத் திருவிளக்கு நம் ராஜாஜி.

கண்ணன் காட்டிய வழியிலேயே தமது அப் பழுக்கற்ற வாழ்க்கைத் தேரைத் தொண்ணூற் றைந்தாண்டுகளாகத் தடம்புரளாமல் செலுத்திய தருமச் செம்மல். மெத்த மெத்த வளரும் உலகத்துப் புத்தம் புதிய கலைகளையெல்லாம் ஆய்ந்து, தேர்ந்து தெளிந்து கணித்துரைக்கும் பேரறிஞர். இந்தியப் பண்பாட்டிற்கு அடிப்படை யாக விளங்குகின்ற தத்துவத்துறை, இதிகாசத் துறை, பக்தித்துறை, அறத்துறை போன்ற வற்றிலும் மூழ்கி, முக்குளித்து, முத்தும் பவளமும்

வாரி எடுத்து, மணியாரம் ஆக்கி, உபகரிக்கும் பெருந்திருவுடையவர் ராஜாஜி. அத்தகைய ரத்தினங்களில் ஒன்றுதான் பஜ கோவிந்த விளக்கவுரை. இத்தகைய பேரருட் கொடைக்குக் கைம்மாறும் உண்டோ? அவர்களை வாழ்த்தி வணங்கி இவற்றை எல்லாம் உளம் தோயக் கற்றுக் கடைப்பிடித்து ஒழுகுவதே நாம் செய்யத்தக்க கைமாறும். ராஜாஜியின் 'பஜகோவிந்தம்' என்னும் இத்தெய்வத் திருநூல் புதிய பதிப்பாக வெளியிடப் பெறுகிறது.

உன்னதமான பக்தி நெறிக்கும் மெய்ஞானத்திற்கும் ஒப்பற்ற வழிகாட்டியாகத் திகழும் இந்நூல் நம்மை எல்லாம் வாழ்வித்தருள்வதாக.

கம்பன் அறநிலை,
காரைக்குடி.

அன்பன்
கம்பன் அடிப்பொடியான
**சா. கணேசன்**

# பஜ கோவிந்தம்

ஆன்மஞானம் வளர்த்த ஆசான் வாழி!
மாயத்தைச் சிதைத்துக் காட்டிய சங்கரன் வாழி!
அவன் பாடிய பாட்டின் அமுதப் பொருளைத்
தவத் தமிழில் சொல்லச் சிறியேனுக்கு
மொழி தந்த தாய் வாழி!

வயலில் சிறு வாய்க்காலைத் தாண்டுவதுபோல் பெரும் மாயக்கடலைத் தாண்டினர் ஸ்ரீ சங்கரர். ஆன்ம ஞானம் வளர்வதற்காகப் பல வேதாந்த நூல்களை அவர் இயற்றினர். அதற்கும் மேலாக, உலகத்தார் உள்ளத்தில் பக்தியை வளர்ப்பதற்கென்று பல பாடல் களைப் பாடினர். அவற்றில் ஒன்று மிகப் பிரசித்தி பெற்ற "பஜ கோவிந்தம" பாட்டு.

பக்தி மார்க்கம் வேறு, ஞான மார்க்கம் வேறு என்று பக்குவமடையாத சிலர் பேசுவதுண்டு. எடுத்து விவரிக்கும் விஷயத்தைத் தனிப்படுத்திக் குறிப்பதற் காக இதைப்போன்ற சொற்றொடர்களைப் பண்டிதர்கள் ஆங்காங்கு பிரயோகப்படுத்துவார்கள். அதனால் நாம் குழப்பிக்கொண்டு பொருளைத் தவருக உணரலாகாது. அறிவு நன்ருக முற்றி இதயத்தில் பதிந்தால் அது ஞானமாகும். அந்த ஞானமானது வாழ்க்கையுடன் கலந்து ஒன்ருகச் சென்று செயலுநவ மடைந்தால் அதுவே பக்தியாகும். முற்றிய அறிவு பக்தி என்று சொல்லப்படும. நன்ருகப பதிந்து பக்தியாக உருக் கொள்ளாத அறிவு பயனபடாத ஒரு பண்டம். பொன் வேறு பித்தளை வேறு எனபதைப்போல், ஞானம்

என்பது ஒரு தனி மார்க்கம், பக்தி என்பது வேறொரு தனி மார்க்கம் என்று எண்ணுவதும் பேசுவதும் அறியாமை. புலன்களை அடக்கினாலன்றி அடைந்த அறிவு முற்றி இதயத்தில் பதியாது; ஞானம் தோன்றாது. புலன்களின் இயற்கை வேகத்தை எப்படி அடக்கி ஆள்வது? மோகத்தையும் பற்றுக்களையும் நீக்கினாலொழிய உள்ளத்தைத் திருத்த முடியாது. உபதேசிக்கும் பொருளைச் செயல் முறையில் ஏற்றும் வழி அறிந்து மக்களுக்கு உபதேசித்த பெரியோர்களில் சிறந்தவர் திருவள்ளுவனார். அவர் சொன்னதாவது:

> பற்றுக பற்றற்றான் பற்றினை அப்பற்றைப்
> பற்றுக பற்று விடற்கு

நம்மாழ்வார் பாசுரம்:

> அற்றது பற்றெனில் உற்றது வீடு உயிர்
> செற்றது மன்னுறில் அற்று இறை பற்றே.

என்கிற திருவாய்மொழிப் பாசுரத்திலும் இந்த விஷயமே அடங்கியுள்ளது.

> விஷயா விநி வர்த்தந்தே
> நிராஹாரஸ்ய தேஹிந:
> ரஸவாஜம் ரஸோப்யஸ்ய
> பரம் திருஷ்ட்வா நிவர்த்ததே:

என்கிற கீதா சுலோகமும் இந்த வழியைக் காட்டுகிறது. ஒரு பற்றானது அடியோடு தீர்ந்து போய் அதினின்று மனம் விடுதலையடைய வேண்டுமானால் மனசை சர்வேசுரன்பால் செலுத்த வேண்டும். புலன்களை அடக்க வேண்டுமென்கிற எண்ணம் உண்மையில் சித்தியடைய வேண்டுமானால் பக்தியின்றி நிறைவேற்றவே முடியாது என்பதை உணர வேண்டும். புலன்களை அடக்க முயற்சி செய்த அனைவருடைய அனுபவமும் இதுவாகும்.

> முத்திநெறி யறியாத மூர்க்கரொடு முயல்வேனைப்
> பக்திநெறி அறிவித்து

என்று பாடினார் மாணிக்கவாசக சுவாமிகள். "மூர்க்கர்' என்றால் மெய்ஞ்ஞானத்துக்குத் தடையாக உள்ளத்தில் நிற்கும் அகங்காரமும், ஆசைகளும், பற்றுகளும். அவற்றைவிட வேறு யாரே தீய மூர்க்கர்? ஆசமனம் செய்வதுபோல் எளிதாக ஞான சமுத்திரத்தை அள்ளிக் குடித்த ஆதி சங்கராச்சாரியரே பக்தியை வளர்க்க வேண்டிய பாட்டுக்களைப் பாடினார் என்றால் அதுவே போதும்; பக்தியும் ஞானமும் ஒன்றே என்பதற்கு வேறு சான்று வேண்டியதில்லை. பல வேதாந்த நூல்களை எழுதிய ஸ்ரீ சங்கரர், விஷயம் அவ்வளவையும் வெகு சுருக்கமாகப் பஜ கோவிந்தப் பாட்டில் அடக்கி, பக்தியும் ஞானமும் ஒன்றாகக் கூடிய பேருண்மைப் பொருளுக்கு எதுகையும் சந்தமும் கூட்டி, வெகு இனிய வடிவம் தந்து பாடியிருக்கிறார்.

"பஜ கோவிந்தம்" பாட்டைத் தமிழர் கேட்டிருக்கிறார்கள். புதியதல்ல. இங்குமங்கும் துக்கடாவாக எடுத்துப் பாடுவதும் உண்டு. முழுவதையும் கிரமமாகப் படித்தறிவது நன்று. முப்பத்தொரு பாடல்களையும் நான் படித்து அறிவும் மகிழ்ச்சியும் அடைந்தபோது இதைத் தமிழில் சொல்ல வேண்டும் என்ற ஆசை மனத்தில் உதித்தது. இதுவும் மோகமே என்பதை அறிவேன். ஆயினும் ஆசையைத் தீர்த்துக் கொள்ளுகிறேன். பெரியோர்கள் மன்னிக்க வேண்டும்.

> கோவிந்தன் வாழி! நம் கோவிந்தன் வாழி!
> கதிவேறில்லை மதிகெட்ட மனமே.
> மரணம் வந்தெதிரில் நிற்கும் போது
> சரணம் வேறில்லை. மாதவனடியின்றி,

வாவென்று காலன் வந்தழைக்குங்கால்
ஆவென்று அலறுவாய் கற்றறி மூடனே!
நெட்டுருச் சூத்திரங்க ளப்போது
சற்றேனும் உதவா மடமதியே!

भज गोविन्दं भज गोविन्दं
भज गोविन्दं मूढमते ।
संप्राप्ते संनिहिते काले
न हि न हि रक्षति डुकृञ्करणे ॥ 1

பஜ கோவிந்தம் பஜ கோவிந்தம்
பஜ கோவிந்தம மூடமதே
ஸம்ப்ராப்தே சந்நிஹித்தே காலே
ந ஹி ந ஹி ரக்ஷிதி டுக்ரிஞ் கரணே.

கலைமகளே வந்து தன் அன்புக்குரிய சங்கரர் வாய் வழிச சொலலுகிருள்: கற்ற கல்வியும், படித்த நூலகளும் பயின்ற கலைகளும் இவையெல்லாம் அந்திம காலத்தில் உனனை ரக்ஷிக்குமா? இல்லை. கோவிந்தனை வந்தனை செய்து கடைத்தேறு. யமன் வந்து உன்னை வாவென்று அழைக்கும்போது படித்த நூல்களைக் கொண்டு நீ அவனிடம் வாதித்து ஒன்றும் அடைய முடியாது. கோவிந்தனை வழிபட்டால்தான் மீள்வாய். ஈசுவர பக்தியின்றிக் கற்ற கல்வியறிவு ஏதும் யமன் முன் பயன்படாது.

மனிதனை மயக்கும் பல மோகங்களில் கல்விச் செருக்கும் ஒன்று. சுக போகத்துக்கும் பணத்துக்கும் மக்கள் ஆசைபபட்டுத் துன்பமடைவது யாவரும் அறிந்த விஷயம். அவற்றைப்போலவே கல்வி கற்பதி லடையும புகழாசையும் ஒரு மோகம் என்கிருர் சங்கரர்.

மரணம் வந்து எதிரே நிற்கும் வரையில் நூல்களைப் படிப்பதிலேயே வாழ்நாட்களைச் செலவழித்து, பக்தி செய்யாமல் கெட்டுப்போக வேண்டாம் என்கிறார். பல மோகங்களுள் கல்வி மோகத்துக்கு முதல் பாட்டிலேயே ஆசிரியர் இடம் வைத்தார்.

''டுக்ரிஞ்'' என்பது புகழோங்கிய பாணினி இலக்கணச் சூத்திரங்களைக் குறிக்கும். ''யமன் முன்னிலையில் பாணினி சூத்திரங்களை ஒப்புவிக்கப் போகிறாயா?'' என்று பரிகாசமாகக் கேட்கிறார். ஈசுவர பக்தியில்லாமல் எவ்வளவு பாண்டித்தியம் பெற்றாலும் பயனில்லை என்று படித்தவர்களுக்கு அழுத்திச் சொல்லுவதற்காகப் பாணினி சூத்திரங்களை உதாரணமாக எடுத்துக்கொண்டார். பாணினி சூத்திரங்களைப் பற்றிச் சொன்னதில் பக்தி செய்யாமல் கற்கும் எல்லாக் கல்விகளும் அடங்கும்.

## 2

பகவானை மறந்துவிட்டு வெறும் பாண்டித்தியத்துக்கும் அதனால் அடையக்கூடிய புகழுக்கும் ஆசைப்பட வேண்டாம் என்று முதல் பாட்டில எச்சரித்துவிட்டு, அடுத்தபடி பணம் சேர்க்கும் மோகத்தைப் பற்றி ஸ்ரீ சங்கரர் சொல்லுகிறார்.

பணம், பணம் என்னும் ஆசை எண்ணிறந்த ஜனங்களுக்கு அளவற்ற துக்கம் உண்டாக்கிவிடுகிறதை அனைவரும் கண்டாலும் கண்டதிலிருந்து மக்கள் அறிவு அடைவதில்லை.

செல்வம் ஈட்டுமாசை யொரு தீராத் தாகம்
வெல்லுதல் வேண்டு மந்தப் பொல்லா நோயை
நல்லமுடிவு செய்துகொள் உள்ளத்திலே

சொந்தத்தில் பாடுபட்டு வந்ததை வைத்து
அந்தமட்டில் போது மென்று மகிழ்ந்தமர்

मूढ जहीहि धनागमतृष्णाम्
कुरु सद्बुद्धिं मनसि वितृष्णाम् ।
यल्लभसे निजकर्मोपात्तम्
वित्तं तेन विनोदय चित्तम् ॥ 2

மூட ஜஹீஹி தனுகம த்ருஷ்ணும்
குரு ஸத் புத்திம் மனஸி வித்ருஷ்ணும்
யல்லபஸே நிஜகர் மோ பாத்தம்
வித்தம் தேன விஞேதய சித்தம்.

பாமர மக்கள் உள்பட எல்லோருக்கும் பாடியது பஜ கோவிந்தம். ஞானமும் பக்தியும் அனைவருக்கும் உரித்தான பெருஞ்செல்வம். சங்கருடைய உபதேசம் உலகத்தைத் துறந்த சந்நியாசிகளுக்கு மட்டுமல்ல. கஷ்டப்பட்டு வாழ்க்கை நடத்தும் சாதாரண மக்களுக் கென்றும் பாடுகிருர். "யல் லபஸே நிஜ கர்மோ பாத்தம் வித்தம்" என்ருல், உன் சொந்த உழைப்பிஞல் நீ சம்பாதிக்கும் பொருளை வைத்து, "தேன விஞேதய சித்தம்" அதை அனுபவித்து உள்ளத்தில் திருப்தி பெறுவாயாக என்கிருர்.

பணம், பணம், இன்னும் பணம் என்று ஒரு தீராத தாகத்தை உண்டாக்கிக் கொண்டு துக்கப் படாதே! அது உனக்கு நன்மையல்ல; அதை உன் சத்துருவாகக் கருது; அதை வென்று உள்ளம் திருப்தி நிலையில் நிற்கச் செய் என்கிருர். நீ பணத்தின் வழி யாகக் கோருவது மகிழ்ச்சியல்லவா? நல்ல வழியில் பாடுபட்டு அடைந்த சொத்தை வைத்துத் திருப்தி

அடையாமல், இது இல்லையே அது இல்லையே என்று துக்கப்படுவது மடமை; மகிழ்ச்சிக்கு வழியல்ல.

**இறல்ஈனும் எண்ணாது வேஃகின்; விறல்ஈனும்**
**வேண்டாமை என்னும் செருக்கு.**

என்று உறுதியாகச் சொன்னார் வள்ளுவர்.

(எண்ணாது) பின் விளைவதை யோசிக்காமல் பொருளுக்கு ஆசைப்பட்டு அதற்காக முயற்சி செய்தால் (இறல்) கேடு விளையும். அவ்வாறின்றி, பிறரிடம் பொருளைக் கண்டாலும் அதற்காக ஆசைப்படாமலிருக்கும் மன நிலையை நீ பயிற்சி செய்து பெற்றுவிட்டால் அதுவே மகிழ்ச்சிக்குக் காரணம். அது உனக்கு (விறல்) வெற்றியைத் தரும். ஆசையை அடக்கி வேண்டாமை நிலையை அடைந்துவிட்டால அதுவே ஒரு பெருஞ் செல்வம். வேண்டாமை என்று திருவள்ளுவர் சொல்லுவதே சங்கரர் சொல்லும் 'வித்ருஷ்ணாம்'. அந்த நிலையை வள்ளுவர் செருக்கு என்றார். சத்துருவை யுத்தத்தில் தோற்கடித்தால ஒருவன் செருக்கடைவானல்லவா? வேண்டாமை அந்த விதமான செருக்குக்குக் காரணம் என்றார்.

## 3

மூன்றுவது பாட்டில் சங்கரர் காமத்தைப் பற்றிச் சொல்லுகிறார். எதை வென்றாலும் இந்தப் பிசாசை வெல்வது கடினம் என்பது அனைவரும் அறிந்த உண்மை.

**நம்பாதே நரம்பு வேகத்தை**
**நோக்காதே நாரியர் தேகத்தை**
**வலுவில் ஏன் வாவெனல்**
**விவேக மழிக்கும் வியாமோகத்தை?**

மார்பின் அழகும் இடையின் அந்தமும்
வேர்வையு மலமும் அழகும் தசையுமென்று
தீர்ந்த இந்த உண்மையைத் திரும்பத் திரும்ப
ஓர்ந்தோர்ந்து உள்ளத்தில் உறுதி அடைவாய்?

नारीस्तनभरनाभीदेशम्
दृष्ट्वा मागा मोहावेशम् ।
एतन्मांसवसादि विकारम्
मनसि विचिन्तय वारं वारम् ॥ ३

நாரீ ஸ்தன பர நாபீ தேசம்
த்ருஷ்ட்வா மாகா மோஹாவேசம்
ஏதன் மாம்ஸ வஸாதி விகாரம்
மனஸி விசிந்தய வாரம் வாரம்.

கண்ணை இங்குமங்கும் வேட்டையாட விடாதே. செல்லக் கூடாத இடத்தில் அது செல்லாமல் காத்துக் கொள். இல்லையேல் ஏமாந்து போய், மோகாவேசத்தில் சிக்கிக்கொள்வாய் என்கிறார். அழகாய்த்தான் இருக்கிறார்கள். ஆயினும் அவர்களுடைய உடலின் அந்தத்தை அளந்து மகிழ வேண்டாம். அது உன் பொருளல்ல. கிடைக்காத பொருளைக் கண்டு ஆசைப் படுவது வருத்தமே தரும். இதில் என்ன குற்றம் என்று எண்ணி மோசம் போக வேண்டாம். கண்கள் வழி திருப்தி உண்டாகாது. உண்டாவது ஆசைதான். ஒருவன் தண்ணீரைத் தேடுவான். தாகத்தை யாரேனும் தேடுவரோ? தேடினால் பிறகு உடனே தண்ணீரைத் தேட வேண்டுமல்லவா? நேர்மையை இழக்க எண்ணமில்லையாயின், ஏன் நீயாகக் கஷ்டத்தை உண்டாக்கிக் கொள்ள வேண்டும்? மகளிர் பேரில் பார்வையைச் செல்லவிட்டாயானால் கட்டாயம் ஆசை வளர்ந்துகொண்டே போய் உள்ளத்தின் உறுதி

யானது நீயும் அறியாமல் வரவரக் கரைந்து போகும். இயற்கையிலேயே நேர்மையைக் காப்பது உனக்குக் கடினம். அப்படியிருக்க அந்தக் கஷ்டத்தை ஏன் பெருக்கிக் கொள்கிறாய்? கண்ணுக்கு இரை போட்டாயானால் உன் சத்துருவுக்கு ஆயுதங்கள் தந்தவாறு ஆகும். "மகாமோஹாவேசம்" என்றால் மோகாவேசம் போகாதே. 'ஆவேசம்' என்றால் மனம் உன் வசத்தில் நிற்காமல் தன் பாட்டுக்குச் செல்வது, "கண்களைப் போனபடி விட்டால் இந்த நிலையை அடைவாய், வேண்டாம்" என்கிறார் சங்கரர்.

புத்தியை ஏமாற்றும் இந்த அழகெல்லாம் உண்மையில் என்னவென்பதை அடிக்கடி சிந்தனை செய்து மனசையும் உறுதிப்படுத்திக்கொள்ள வேண்டும் என்கிறார். இறைச்சியும் நிணமும் தவிர வேறென்ன? பொருள் இன்னதென்று தெரிந்தபின் வெளி வடிவத்தைக் கண்டு உண்மையை மறந்துவிடக் கூடாதல்லவா? மனசில் உறுதியும், அறிவும் இருந்தால் கண்ணைப் பற்றிக் கவலையில்லை. அந்த உறுதி இல்லாமலிருக்க, கண்ணை யதேச்சையாக இங்குமங்கும் நோக்கவிட்டால் மோசம் போவோம்.

புலன்களை அடக்கப் பயில வேண்டும். இதைப் பயின்றபின் உள்ளத்தில் சுதந்திரம் அடைவோம். அதன் மேல் சாந்தம் உண்டாகும். ஆசையும் மோகமும் மகிழ்ச்சி போலத் தோற்றம கொண்ட துக்கமே யாகும்.

புலன்களின் வேகத்தை அடக்கி ஆயாசமில்லாமல் மனம் சாந்த நிலையில் நின்று, அதன்மேல் உண்டாகும் மகிழ்ச்சியே நிலையாக நிற்கும் ஆனந்தம். அதை அடைய வேண்டுமானால் முதலில் கண்களை அடக்கி ஆளவேண்டும். இவன் ஞானி, இவன் மகாத்மா என்று

புகழ் பெறுவதற்கல்ல; ஒருவனுடைய க்ஷேமத்திற்கும் உள்ளத்தின் அமைதிக்குமே இது இன்றியமையாத சாதனம்.

## 4

படிப்பு மோகம், பணமோகம், பெண் மோகம் இம் மூன்றும் மனிதனை மோசம் செய்யும் என்று சொல்லிய பிறகு பொதுவாக வாழ்க்கையின் தன்மையை நான் காவது பாட்டில் சொல்லுகிறார். நீரின்மேல் மிதக்கும் தாமரை இலையை நம்பி அதன்மேல் ஒரு நீர்த்துளி தங்குகிறது. அதன் நிலைமையே வாழ்க்கையின் சுகம் என்கிறார். தாமரை இலையின் மேலுள்ள நீர்த்துளி யானது துள்ளியதிர்ந்து நிலையற்று அலைவதுபோல் மனிதன் உள்ளம் அலைகிறது. சபலமே அதன் நிரந் தரப் பான்மை. நோயால் உடல் பீடிக்கப்பட்டு, பற்றுக் களால் உள்ளமும் பீடிக்கப்பட்டு மனித வாழ்க்கை எல்லா வகையிலும் துயரத்தில் மூழ்கி நிற்கிறது.

உலகத்தில் நாம் அடையும் எந்தவிதமான பொருளும் துக்கத்தோடு கலந்தே நிற்கிறது. ஒரு பொருளை அடைந்தோமென்றால் உடனே அதைப் பற்றிக் கவலையும் சிந்தனையும், அந்தப் பொருளை இழக்கும் பயமும் துக்கமும் கூடவே வந்து சேருகின் றன. தேகத்தைப் பீடிக்கும் வியாதிகளுக்கோ கணக் கில்லை. உள்ளத்தைத் துன்புறுத்தும் பற்றுக்களுக்கும் அந்தப் பற்றுக்களாலுண்டாகும் கவலைகளுக்கும் அளவேயில்லை. பற்றுக்களாலும் அபிமானத்தாலும் நாம் அடைவது சுகம்போல் காட்டினாலும் உண்மையில் சுகமன்று; கவலையும் துயரமுமே முதலை வாயில் சிக்கிய யானை "ஆதிமூலமே" என்று கதறி அபய மடைந்ததுபோல் வியாதி-அபிமானம் என்ற இரட்டை

முதலைக்கு இரையாகச் சிக்கி நிற்கும் நாமும் பகவானைச் சரணடைவோம்.

ஆயுள் முழுதும் தீராத் துயரம்
நோயும் நொடியும் உடலை வாட்ட
பற்றும் வாட்ட மதிகெட்ட மனத்தை
சற்றும் ஒழியாது ஆசை மேல் ஆசை
தாமரை இலையின் நீர்த்துளி போல
சாம்வரை அலைச்சல் சுகமொன்றில்லை
சஞ்சல மன்றிச் சாந்த மென்பது
கொஞ்சமு மில்லை இது மக்கள் வாழ்க்கை,

नलिनीदलगतजलमतितरलम्
तद्वज्जीवितमतिशयचपलम् ।
विद्धि व्याध्यभिमानग्रस्तं
लोकं शोकहतं च समस्तम् ॥ 4

நளினீ தளகத ஜலமதி தரலம்
தத்வத் ஜீவித மதிசய சபலம்,
வித்ஹி வ்யாத்யபிமான க்ரஸ்தம்
லோகம் சோகஹதம் ச ஸமஸ்தம்.

## 5

இவ்வாறெல்லாம் சொல்லி வாழ்க்கையிலுள்ள உண்மையான சுகத்தை ஏன் குறைக்கப் பார்க்கிறீர் என்று கேட்கிறான் அறிவில்லாப் பேதை. சுற்றிலும் உள்ள பந்துக்களைப் பார். அவர்கள் என் பேரில் எவ்வளவு பிரியம் வைத்துச் சுகம் தருகிறார்கள்! இது பொய்யா? கனவா? மனைவியைப் பார். அவள் என்னிடம் வைத்திருக்கும் அன்பு ஒன்றே போதாதா வாழ்க்கைத் துன்பங்களுக்கெல்லாம் சேர்த்து விலை?

ஏன் இதையெல்லாம் கணக்கிடாமல் "எல்லாம் மோகம், மோகம்" என்கிறீர்? இதற்குப் பதில் சங்கரர் கூறுகிறார்:

பலமுள்ள போது சம்பாத்திய பத்தி
சம்பாத்தியமுள்ளவரை பந்து பாத்திய பக்தி
வருமான முள்ள மட்டும் பரிவாரக் கூட்டம்
கிழவனைப் படுத்தபின விழுந்தோடிக் கலையும்
மூதேறிப்போனால் ஏதென்பா ரில்லை.

यावद्वित्तोपार्जन शक्तः
तावन्निजपरिवारो रक्तः ।
पश्चात् जीवति जर्जर देहे
वार्त्तां कोऽपि न पृच्छति गेहे ॥ 5

யாவத்வித்தோ பார்ஜன சக்தः
தாவந் நிஜ பரிவாரோ ரக்தः
பஸ்சாத் ஜீவதி ஜர்ஜர தேஹே
வார்த்தாம் கோபி ந ப்ருச்சதி கேஹே.

சொந்தம், சுற்றம், பரிவாரம் என்பதெல்லாம் சம்பாதிக்கும் சக்தி உனக்கிருக்கும் வரையிலேதான், மகனே! அது தீர்ந்து போய் இனி உன்னால் உதவ முடியாது என்று கையை விரித்ததும் பந்துக்கள் இருந்த இடம் தெரியாமல் மறைந்து போவார்கள். இவ்வாறு சங்கரர் எச்சரிப்பது பந்துக்களைக் குறை கூறியவாறு அல்ல. இயற்கையின் தன்மையை எடுத்துக் காட்டுகிறார். அவ்வளவே! அதற்கு பந்துக்கள் என்ன செய்வார்கள், பாவம்!

பொருளற்ற பொருளையே பற்றிக்கொண்டு நிற்காதே என்கிறார். பற்ற வேண்டிய பொருள் ஒன்றே; அது கோவிந்தன் திருவடி. அதை மறந்துவிட்டு

நிலையற்ற பொய்யைப் பற்றிக்கொண்டு துயரத்தைத் தேடிக்கொள்ளாதே என்கிறார். உன்னிடம் அவர்கள் பெறக்கூடிய நன்மையைப் பொறுத்து நிற்கிறது சுற்றத்தாரின் அன்பும் யோக க்ஷேம விசாரணையும். நீ முதுமை அடைந்து சம்பாதிக்கும் சக்தி அழிந்ததும் அவர்கள் உன்னை விட்டுச் செல்வார்கள். தற்போது உன்னைச் சுற்றி ஜனங்கள் நிற்பதைப் பார்த்து மோசம் போகாதே என்கிறார். எங்கே, எந்த ஊரில் எந்தக் குடும்பத்தைப் பார்த்தாலும் சங்கரர் சொல்லும் உண்மையை ஐயந்தீரக் காணலாம்.

## 6

சுற்றத்தாரைப் பற்றிச் சொன்னதெல்லாம் உண்மையாக இருக்கலாம். இதோ என் மனைவி இருக்கிறாளே, இவள் என்பால் காட்டும் அன்பும் பொய்யா? இது பொருளற்ற பொருளா? இரு உயிர்கள் ஒரு தேகம், அல்லது இரண்டு தேகங்கள் ஓர் உயிராக இருக்கிறோமல்லவா? என் உடலின் ஒவ்வொரு அணுவும் தனதாகப் பாவித்து வரும் இந்த மனைவி என் பக்கத்திலிருக்க எப்படி வாழ்க்கை பொருளற்றதாகும் என்று கேட்கிறான் பேதை. இதைப்பற்றி ஆசாரியர் பாடுகிறார்:

மூச்சுள்ள போது மனையாளின் பேச்சு
கட்டியணைத்த தேகம் பட்டுப் போச்சென்றதும்
பயங்கொண் டகல்வாள் சுயம் வர மனைவியும்

यावत्पवनो निवसति देहे
तावत्पृच्छति कुशलं गेहे ।
गतवति वायौ देहापाये
भार्या बिभ्यति तस्मिन्काये ॥ 6

யாவத்பவனோ நிவஸதி தேஹே
தாவத் ப்ருச்சதி குசலம் கேஹே,
கதவதி வாயௌ தேஹாபாயே
பார்யா பிப்யதி தஸ்மின் காயே.

எந்த உடலை வாழ்நாளெல்லாம் தழுவி முத்தமிட்டு என்னுயிரும் அந்த உயிரும் ஒன்றே என்று எண்ணி வந்தாளோ, அந்த உடலை, மேலும் கீழும் செல்லும் காற்று நின்றுவிட்டது என்றதும், "பிரேதம், பிசாசு' என்று மனைவியும் பயந்து தூர விலகுவாள். "வலி இப்போது எப்படியிருக்கிறது? தூங்கினீரா? காலைப் பிடிக்கட்டுமா?" என்றெல்லாம் கேட்டு வந்த மனைவி மூக்கில் சுவாசம் நின்றதும், தழுவியும், முத்தமிட்டும் வந்த தேகத்தைக் கண்டு பயப்படுகிறாள். பிரேதமான தேகம் திடீரென்று எழுந்து உட்கார்ந்தால் 'ஓ' என்று பயந்து கத்திக் கொண்டு ஓடுவாளல்லவோ? உடலின் பற்றுக்களும் சேர்க்கைகளும் இத் தன்மையனவே. கொண்ட மனைவியைத் தள்ளிவிடு என்று சங்கரர் சொல்லவில்லை. வாழ்க்கை நடத்த வேண்டியதுதான். ஆனால் மோகங் கொள்ளாதே என்கிறார். பொருளின் தன்மையை அறிந்து செய்வன செய்; பொய்யை மெய் யாக எண்ணி வீண் துயரம் கொள்ளாதே. மனைவி யார், மகன் யார், உன் உயிருக்கும் அவர்கள் உயிருக் கும் என்ன சம்பந்தம்? உடலின் சம்பந்தா சம்பந் தங்கள் உயிருள்ள அளவுதான் என்கிறார்.

இல்லறத்தை நடத்த வேண்டியது கடமை. ஆனால், எந்த விஷயத்தையும் அளவு அறிந்து கிர கித்துக் கொண்டு நடப்பது விவேகம். நிலையற்றதை நிலையுள்ளதாக எண்ணுவதில் ஒரு லாபமுமில்லை. உண்மையைத் தெரிந்துகொண்டு நடந்தால் துக்கம் குறையும்.

# 7

குழந்தைப் பருவம் விளையாட்டில் கழிந்து போகிறது. யௌவனம் வந்ததும் காமவிசாரம், சிந்தனை முழுவதும் பெண்களைப் பின் தொடர்ந்து செல்லும். பிறகு விருத்தாப்பிய தசை அடைந்ததும் மக்கள், மனைவி இவர்கள் கதியென்ன என்பதே கிழவனின் பெருங்கவலை. சதாகாலமும் இந்தச் சிந்தனையில் கழித்து விடுகிறான். கடவுளைப் பற்றிச் சிந்திப்பதென்பது எந்தப் பருவத்திலும் இல்லை. விளையாட்டிலும், பெண் மோகத்திலும், குடும்பக் கவலையிலும், பொருளற்ற சிந்தனைகளிலும், அந்த அந்தப் பருவத்தில், அந்த அந்த விதம் காலம் கழிநது போகிறதேயொழிய ஞானத்தைத் தேடுவார் யாருமில்லை. இதற்கு என்ன செய்வது என்று வருத்தப்படுகிறார் சங்கரர்.

விளையாட்டில் தீரும் குழந்தைப் பருவம்; பின்னர்
வளையல் கை மகளிரே சிந்தனை யெல்லாம்,
மனைவியும் மக்களும் கிழவன் விசாரம், கடவுளை
நினைப்பாரில்லையே யாதொரு தசையிலும்.

बालस्तावत् क्रीडासक्तः
तरुणस्तावत्तरुणीसक्तः ।
वृद्धस्तावच्चिन्तासक्तः
परे ब्रह्मणि कोऽपि न सक्तः ॥ 7

பாலஸ்தாவத் க்ரீடா ஸக்த:
தருணஸ்தாவத் தருணீ ஸக்த:
வ்ருத்தஸ் தாவச்சிந்தா ஸக்த:
பரே ப்ரம்மணி கோபி ந ஸக்த:

வாழ்நாள் முழுவதும் பேய்த்தேர் வேட்டையில் இப்படி முடிந்து போகிறது. எல்லாம் மோகம் என்று

அறிவோமாயினும் மெய்ப் பொருளை ஓர்ந்து அறிவ
தற்கு யாருமே எந்தப் பருவத்திலுமே முயல்வதில்லை.

8

சொந்தமேது பந்தமேது தம்பி
விந்தையே யனைத்தும் சிந்தித்தாயேல்
மனைவி யார் மகனார் நீயுந்தானார்?
அனைத்துமே மாயை என்றுணர்வாய்
குலமேது ஊரேது உயிருக்கு?

का ते कान्ता कस्ते पुत्रः
संसारोऽयमतीव विचित्रः ।
कस्य त्वं कः कुत आयातः
तत्वं चिन्तय तदिह भ्रातः ॥ 8

கா தே காந்தா கஸ்தே புத்ர:
ஸம்ஸாரோயமதீவ விசித்திர:
கஸ்ய த்வம் க: குத ஆயாத:
தத்வம் சிந்தய ததிஹம் ப்ராத:

நீ காதலிக்கும் மனைவி என்பவளுக்கும் உனக்கும் என்ன நிலையான சம்பந்தம்? மகன் என்று அளவிலா அன்பு செலுத்துகிறாயே அவன் யார்?

உலக வாழ்க்கை யெல்லாம் மிக விசித்திரம். நீ யாருடைய சொத்து? எங்கிருந்து வந்தாய்? முன் எங்கிருந்தாய்? நீயாகவே உண்டானாயா? நீ அன்பு செலுத்திக் கவலைப்படும் உயிர்களுக்கும் உனக்கும் என்ன பிணைப்பு? ஏன் இந்தக் கவலை? ஏன் இந்தப் பற்று? இதைக் கொஞ்சம் யோசித்துப் பார். இதை யெல்லாம் கவனித்துச் சிந்தித்தாயானால் மோகங்கள்

தீரும். சாந்தமடைவாய். அழியும் உடலையும் அழியா உயிரையும் ஒன்றெனறு எண்ணிப் பற்றுக்களைப் பற்றிக்கொண்டு மாயையில் வருந்தித் துயரப்படாதே. காலத்தை வீண் சிந்தைகளில் செலுததித் துன்பப் படாதே.

இந்த உலகம் அதிக 'விசித்திரம்' என்கிறார் ஆசாரியர். விசித்திரம் என்றால் உண்மை விளங்காத ரகசியமும் அதனுடன் அழகும் அற்புதமும் கலந்த தன்மை. வியப்புக்குரிய அழகும் ரகசியமும் பல நிறங்கள் சேர்ந்து கண்ணைக் கவரும் பொருளாக விளங்குகிறது இந்த உலகம். அழகுக்குக் குறை வில்லை. ஆனால் உனக்கும் அதற்குமுள்ள சம்பந்தம் நிலையற்றது.

## 9

நல்லவர்களோடு கூடி வாழ்ந்தால் ஆசையும் பற்றும் நீங்கிகொள்ளும் பயிற்சிக்கு இடமுண்டாகும். சகவாசத்தின் பயன் அனைவரும் அறிவார். உபதேசத் தைக் காட்டிலும் அது மிக சக்தி வாய்ந்தது. சக வாசத்தின் பயனாக, சாந்தமும், நடுநிலையும் தோன்றும். ஆசையும் பற்றும குறையக் குறைப உயிரைக் கவர்ந்து நிற்கும் மோகம் குறையும். இது நல்லது, இது பொல்லாதது, இது மேன்மை, இது தாழ்மை என்று காணுவதற்குத தடையாக நிற்பது மோகம். பொய்யும் உண்மையும் மாறாக உணரும் நிலைக்கு மோகம் என்று பெயர். ஆசையும் பற்றும் இந்த மயக்கத்தை உண்டாக்குகின்றன. ஆசையும் பற்றும் குறையக் குறைய மயக்கம தெளியும். மயக்கம்

முற்றிலும் தீர்ந்தால் சித்தம் சஞ்சலப்பட்டு அலையாமல் நிலைபெற்று நிற்கும். சித்தம் நிலையில் நின்றால் தானாகவே உள்ளம் தூய்மை யடைந்துவிடும். தூய்மையே சிவம் என்பது, அந்த நிலையடைந்தால் அதுவே வீடுபேறு, ஜீவன் முக்தி.

"பந்த மறுத்தெனை யாண்டு பரிசற என் துரிசு மறுத்து அந்தம் "எனக்கு அருளியவாறு" என்று மாணிக்கவாசகர் பாடிய "அந்தம்" என்பதே ஜீவன் முக்தி.

> நல்லது நல்லது நல்லவர் நேசம்
> அதனால் குறையும் பிடித்த பாசம்
> பாசம் குறையத் தீரும் மோகம்
> மோகம் போயின் சித்தத்தி லமைதி
> அதுவே உயிருடன் வீடெனக்காண்.

> सत्सङ्गत्वे निस्सङ्गत्वम्
> निस्सङ्गत्वे निर्मोहत्वम् ।
> निर्मोहत्वे निश्चल चित्तम्
> निश्चलचित्ते जीवन्मुक्तिः ॥ 9

> ஸத்ஸங்கத்வே நிஸ்ஸங்கத்வம்
> நிஸ்ஸங்கத்வே நிர்மோஹத்வம்
> நிர்மோஹத்வே நிஸ்சலதத்வம்
> நிஸ்சலதத்வே ஜீவன்முக்திः

பாசமும் பற்றும் குறைந்து, அதன் மேல் மோகம் குறைந்து, அதன் பயனாகச் சம நிலை அடைந்த பிறகு உள்ளம் சிவமாகும். இலையும் பூவும் காயும் போல் ஒன்றன் பின் ஒன்று தோன்றி வளரும். தீயதும் இவ்வாறே, நல்லதும் இவ்வாறே. முடிவில் வீடுபெற

வேண்டின் முதலில் பக்தர்களுடைய சகவாசம் வேண்டும். நாஸ்திகர் சகவாசத்தை விடவேண்டும். பக்தி மார்க்கத்தில் இல்லாதவர்களை இகழ வேண்டியதில்லை; வெறுத்தலும் கூடாது. ஆண்டவனுடைய அருள் அவர்களுக்கும் கிட்டவேண்டும். 'பக்தியை எனக்குத் தந்தானே அத்தன்' என்று மகிழ்ச்சியும் வியப்பும் அடைந்து வாதவூர்ப் பெருமான்போல் உள்ளம் கரைந்து உருக வேண்டும். மற்றவர்கள் பக்தியடையவில்லையே என்று துயரப்பட வேண்டும். வெறுத்தல் அகம்பாவமாகும். அகம்பாவம் கொண்டால் ஆண்டவன் அருளிய பக்தி கரைந்துபோகும். ஈடு என்ற சிறந்த தமிழ் வைஷ்ணவ கிரந்தம் ஒன்றில் சொல்லப்பட்ட விஷயம்: ''ஒருவனுக்கு வைஷ்ணவத்வம் உண்டு, இல்லை என்னுமிடம் தனக்கே தெரியுங்காண். பிறர் அநர்த்தம் கண்டால் 'ஐயோ!' என்று இரங்குவானாகில் அவன் 'நமக்குப் பகவத் சம்பந்தம் உண்டு' என்று இருக்க அடுக்கும். 'இத்தனையும் வேண்டும் பட்டிடுவானுக்கு' என்றிருந்தானாகில் அவன் 'நமக்கு பகவத் சம்பந்தமில்லை யென்று இருக்க அடுக்கும்.' இது வைஷ்ணவ நூல்களில காணும் 'மணிப் பிரவாளம்' என்னும் தனியழகு கொண்ட தமிழ். அதைக் கண்டு பயபபட வேண்டாம். விஷயம் மிகத் தெளிவாகச் சொல்லப்பட்டிருக்கிறது.

## 10

மெய்ஞ்ஞானம் அடைந்தால் வாழ்க்கையின் துயரங்கள் தாமே தீர்ந்துபோகும். மெய்யறிவு ஒன்றே துக்கத்துக்கு மருந்து. அது ஒரு தவறாத மருந்து. இதில் சந்தேகமில்லை என்கிறார் ஆசாரியர்.

முதுமை மேலிட மாயும் காம விகாரம்,
வற்றிய நீர்நிலே இருந்தவிடம் காணுது;
செல்வம் சுருங்கியதும் சூழ்ந்த சுற்றம் எங்கே?
ஞானம் பெற்றதும் ஓயும் மாய மெல்லாம்.

वयसि गते कः कामविकारः
शुष्के नीरे कः कासारः ।
क्षीणे वित्ते कः परिवारः
ज्ञाते तत्वे कः संसारः ॥ 10

வயஸி கதே க: காமவி கார:
சுஷ்கே நீரே க: காஸார:
க்ஷீணே வித்தே க: பரிவார:
ஞாதே தத்வே க: ஸம்ஸார:

துக்கமும் கஷ்டமும் மனசில் மையல் இருக்கும் வரையில். மையல் தீர்ந்து ஞானம் உதயமானவுடன் கவலேயும் துக்கமும் சூரியன் முன் பனிபோல் நீங்கும். மாயம் தீர்க்கும் மருந்து. அறிவு ஒன்றே. அந்த அறிவு வேண்டின் சீலமும் ஒழுக்கமும் பக்தியும் இருக்க வேண்டும். இவையன்றி நூல்களேப் படித்துவந்த அறிவு அறிவாகாது. வெறும் படிப்புக்கும் மெய்ஞ் ஞானத்துக்கும் இதுவே வித்தியாசம்.

வயது தீர்ந்து போனதும் காம விகாரங்கள் எவ்வாறு தாமாகத் தொலேகின்றனவோ, எப்படி நீர் வற்றியதும் ஏரி உருவங்கூடத் தெரியாமல் போகிறதோ, எப்படிப் பணம் சுருங்கியதும் சுற்றத்தார் இருந்த இடம் தெரியாமல் கலேந்து போகிருர்களோ, அவ்வளவு நிச்சயம் அறிவு பெற்றதும் வாழ்க்கையின் துயரங்கள் தீருவது என்கிருர். மக்களுடைய தீரா துக்கமும் சவலேயும் மெய்யறிவால் தீரும். தீர்ந்த வுடன் இயற்கையில் மனிதனுக்குள்ள சக்தியானது

பந்தமின்றி வளர்ந்து பயன் தரக்கூடிய துறைகளில் செல்லும். வீண் கவலையும் அழியாது.

மெய்ஞ்ஞானம் என்பது ஆன்மசக்தி தரும்படி யான நல்ல மருந்து. கவலைகளையும் துக்கத்தையும் தீர்த்து நல்வழியில் ஊக்கம் பெருக்கும் அருமையான மருந்து. சாஸ்திரங்கள் படித்தும் கவலைகள் தீரவில்லை யாயின் பக்தியுடன் படிக்கவில்லை என்பது நிச்சயம். அதுதான் அதற்குக் காரணம்.

## 11

யௌவனமும் உடல் ஆரோக்கியமும் படைத் திருக்கிறேன் என்று கர்வப்பட வேண்டா. வேண்டிய செல்வமிருக்க. சுற்றத்தாரும் நண்பர்களும் சொன்ன படி கேட்பவர்களும் இருக்க, எனக்கு என்ன குறை என்று செருக்கடைய வேண்டா. துரதிருஷ்டம் சேரின் இவை அனைத்தும் ஒரு நிமிஷத்தில் இருந்த இடம் தெரியாமல் மறைந்து போகும். உன் செருக்கெல்லாம் ஒரு கணத்தில் வெப்பமாக மாறிப்போகும். இவ்வுல கத்தின் நிலையாமையை அறிந்து அடக்கத்தோடு வாழ்க்கை நடத்து. வாழ்க்கையில் உனக்குள்ள ஆசைகளையும் பற்றுக்களையும் கழித்துக்கொண்டு கடமைகளைச் செய்து தீர்த்து மெய்ஞ்ஞான வாழ்க்கை யில் இறங்கு. அறிவு பெற்றவன் அந்த அறிவின் பயனாகத் துறவு மார்க்கத்தில் தானாகவே இறங்கு வான்.

துறவு மார்க்கமே மார்க்கம்
உறவு பணமும் வயதும் நம்பி
வேண்டாம் ஆங்காரப் போங்காலம் வந்தால்
சடக்கென்று மறையும் மகனே
நொடிப்பொழுதில் எல்லாம்

मा कुरु धनजनयौवनगर्वम्
हरति निमेषात्कालः सर्वम् ।
मायामयमिदमखिलम् हित्वा
ब्रह्मपदम् त्वम् प्रविश विदित्वा ॥ 11

மா குரு தநஜந யௌவந கர்வம்
ஹரதி நிமேஷாத் கால: ஸர்வம்
மாயாமயமித மகிலம் ஹித்வா
ப்ரஹ்மபதம் த்வம் ப்ரவிச விதித்வா.

உலக வாழ்க்கையில் நாம் அடையும் சுகமும் செல்வமும் பொருளற்ற மாயப் பொருள்கள். அவற்றின் நிலையற்ற பான்மையை யறிந்துகொண்டு துறவு மார்க்கத்தைக் கடைப்பிடி என்கிறார். துறவு மார்க்கத்தில் புகுவது பக்குவமடைந்த பின் என்பது பெரியோர்கள் எச்சரிக்கை. பக்குவமடையாதவரின் துறவு பரிகாசத்துக்கு இடமாகும். பக்குவமடைவது என்றாலென்ன? செல்வமும் செல்வாக்கும் துச்சமாகக் காணும் நிலையை அடையவேண்டும். பந்துக்கள் நண்பர்கள் என்றாவது அயலார் என்றாவது மனத்திலே பேத எண்ணம் இல்லாமலிருக்க வேண்டும். சிற்றின்பச் சபலங்கள் கிட்ட நெருங்காமல் ஒழிக்க வேண்டும். குற்றங்களை நீக்கிக்கொள்வதற்கு சந்நியாசம் சாதனமாகாது. துறவு வேஷம் பூண்டு துறவியின் சங்கற்பம் செய்துவிட்டால் ஞானமார்க்கம் எளிதாகப் போகும் என்று எண்ணி மோசம் போகக்கூடாது. அப்படிச் செய்வது நிறையச் சாப்பிட்டால் ஜீரணசக்தி உண்டாகும் என்று நம்பி வயிற்றுவலி உண்டாக்கிக் கொள்ளும் மடமையாகும். குற்றங்களை முற்றிலும் நீக்கினவர்களே சந்நியாசம் என்கிற நிலைமையைப்பற்றி யோசிக்கலாம்.

எல்லாப் படிகளையும் ஏறிய பின்னரே துறவு என்பது சாத்தியம்.

## 12

உலகமும் உலக வாழ்க்கையும் மாயமாக இருக்கட்டும்; உண்மையாக இருக்கட்டும். நம்முடைய சாமர்த்தியத்தினால் தருமமான முறையில் சுகம் தேடியடைவதற்கு சங்கரர் ஆட்சேபிக்க மாட்டார். தீய மார்க்கத்தில் சுகம் தேடினால் சிறிதளவு இன்பமும் பெரிய அளவில் துக்கமும் நிச்சயம். அவ்வாறு செய்யாமல், தரும நெறியிலே நின்று வாழ்க்கை நடத்தினாலும் சுகம் துக்கம் இரண்டையும் அனுபவித்தே தீர வேண்டும். இரண்டையும் பொறுத்தல் வேண்டும். சங்கரர் சொல்லியிருப்பதை நன்றாக உணர்ந்து மனத்தில் பதியவைத்தால்தான் துக்கத்தைப் பொறுத்துக் கொள்ளும்படியான தீரம் உண்டாகும். வேறு எந்தக் கஷ்டங்கள் நேரிடாவிடினும், மரணமும் அதனால் ஏற்படும பிரிவும் நீக்கமுடியாதல்லவா? மனைவி புருஷனை இழக்கவேண்டும். அல்லது புருஷன் மனைவி இறப்பதைப் பார்த்துத் துக்கம் அடையவேண்டும். இவ்வாறே பிற துக்கங்களும். இவற்றைப் பொறுத்தலுக்கேனும் வேண்டுமல்லவா சங்கரர் சொல்லும் அறிவு? இவற்றைத் தவிர இன்னும் எவ்வளவோ கஷ்டங்களும் உண்டு. 'வேதாந்தம் வேண்டாம், சும்மா வாழ்க்கையை நடத்தலாம்' என்று பலர் செய்து பார்த்தவர்கள், கஷ்டமும் துக்கமும் நேர்ந்த காலத்தில் தாங்கமாட்டாமல் அளவில்லாத துக்கமடைந்திருக்கிறார்கள். ஆனபடியால் மனத்தில் முடிவு செய்து கொள்ள வேண்டும்; வாழ்க்கை என்பதில் துக்கம் கலந்தேயிருக்கும். இன்பத்தின் அங்கம் துக்கம்

பிரபஞ்சத்தில் ஒன்றின்றி மற்றொன்று இருக்க முடியாது. துக்கத்தை நீக்கிவிட முடியாது. அதைத் தாங்கும் உறுதி உண்டாக்கிக் கொள்ள வேண்டும். அதற்கு மெய்யறிவு அவசியம். ஆனபடியால் துறவி யான சங்கரர் சொல்லும் உண்மை, சாதாரண சுக வாழ்க்கைக்கே அத்தியாவசியமான அறிவு.

காலையென்றும் நடுப்பகலென்றும்
மாலைச் சந்தியென்றும் மீன்திமழ் இரவென்றும்
கோடையென்றும் குளிர்ப்பனியென்றும்
ஆடியாடிக் களிநடனமாடி காலதேவியவள்
இடையரு தறுத் தாயுளைக் கழித்தும்
மடமை ஆசை தணிய வில்லையே.

**दिनमपि रजनी सायं प्रातः**
**शिशिरवसन्तौ पुनरायातः।**
**कालः क्रीडति गच्छत्यायुः**
**तदपि न मुञ्चत्याशावायुः॥ 12**

திநமபி ரஜனீ ஸாயம் ப்ராத:
சிசிரவஸந்தௌ புனராயாத:
கால: க்ரீடதி கச்சத்யாயு:
ததபி ந முஞ்சதயாசாவாயு:

இரவும், பகலும், கோடையும் பனியும் என்று மாறி மாறி நடனமேடையில் துள்ளல் காட்டும் ஒரு சுந்தரி யைப் போல் காலதேவி தாண்டவமாடிச் செல்கிறாள். ஆனால் உண்மையில் விசித்திர அழகுடன் பொருந்திய அவளுடைய ஒவ்வொரு தாளமும் ஒவ்வொரு துள்ளல் மிதியும் உன் ஆயுளை அறுக்கும் வாள் என்பதை அறிவாய். நாள் எனபது இன்பம் தருவதோர் தனிப் பொருளே போலக் காட்டி உயிரை வாங்கும் ஒரு வாளாம் என்றார் குறளாசிரியர்.

> நாளென ஒன்றுபோல் காட்டி உயிரீரும்
> வாள துணர்வார்ப் பெறின்.

மாயத்தைப் பற்றிச் சொல்லும்போது அதன் அழகையும் நன்ருக எடுத்துக் காட்டுகிருர் சங்கரர். காலை மாலைச் சந்திகளைவிட வேறு ஒரு அழகான காட்சி உலகத்தில் உண்டோ? இரவின் தனியழகுக்கும் ஒரு ஈடு இல்லை. பருவங்களின் அழகைப் பற்றியோ சொல்லவே வேண்டியதில்லை. இவ்வளவும் என்ன? இடையருமல் உயிர் ஈரும் ஒரு வாள். வேறல்ல. இதை அறிந்தும் ஆசைகளை விடமாட்டோம். ஏன் இந்த மடமை?

## 13

உனக்குப் புத்தி சொல்லுவார் இல்லையே? மரண காலம் வெகு அருகில் இருந்தும் உன் சிந்தையை மனைவி என்றும் உடைமை என்றும் இவற்றில் இன்னும் ஏன் செலவழிக்கிருய்? அந்திம காலத்திலாவது கொஞ்சம் அறிவு மார்க்கம் தேடமாட்டாயா? சிறிதளவேனும் அவ்வாறு செய்தால் வெகு பெரிய பலன் தருமே என்று வருத்தப்பட்டு ஆசாரியர் பாடுகிருர்.

> புத்திகெட்ட மனமே, உன்னை நடத்துவார் இல்லையே!
> சொத்தும் மனைவியும் இப்பவும் விசாரமோ?
> இறக்கும் தறுவாயேனும் நல்லாரின் சேர்க்கை
> பிறவிக் கடலைக் கடத்தும் நல்ல நாவாயாமே.

का ते कान्ता धनगतचिन्ता
वातुल किम् तव नास्ति नियन्ता ।
क्षणमपि सज्जनसंगतिरेका
भवति भवार्णवतरणे नौका ॥ 13

காதே காந்தா தனகத சிந்தா
வாதுல கிம தவ நாஸ்தி நியந்தா
க்ஷணமபி ஸஜ்ஜன ஸங்கதிரேகா
பவதி பவார்ணவதரணே நௌகா.

நம் உள்ளத்தைக் கவரும் பற்றுக்களை நன்றாகச் சிந்தித்தும் பரிசோதித்தும் பார்க்க வேண்டும். மனைவி இருக்கிறாள்; அவளுடைய ஆன்மாவுக்கும் என் ஆன்மாவுக்கும் என்ன சம்பந்தம்? ஒன்று மற்றொன்றை ஏன ஒட்டி நிற்கவேண்டும்? இந்த ஜன்மத்தில் மனைவியென்று கருதும் உயிருக்கும் எனக்கும், முன் அல்லது பின் ஜன்மத்தில் என்ன சம்பந்தம்? ஆன்மாக்களுக்கும் பந்துத்வம் ஏது? ஒரு ஜன்மத்தில ஏற்பட்ட நிலையிலாத ஒரு சம்பந்தத்தைப் பற்றி ஏன விசாரம்? முடிவிலாத கால அளவில் ஒரு உயிரின் காலம் எம்மாத்திரம்? கணமே போன்ற ஒரு அற்பம் அல்லவா? உன் காலம் முடிந்ததும் மனைவிககும் உனக்கும் என்ன சம்பந்தம்? அதைப்பற்றி ஏன் சிந்தனை? பயன் தராத சிநதனை களை விலக்க வேண்டுமலலவா?

மனைவியின் விஷயம் இம்மட்டுமேயானால் பணத்தைப் பற்றி என்ன கேள்வி? அது ஒரு உயிரற்ற பொருள். உடலைவிட்டு வெளியேறின உனககும் அதற்கும் என்ன சம்பந்தம்? அதைப்பற்றி என்ன கவலை உனக்கு?

உண்மை எளிதில் விளங்கினாலும் மயக்கம் இருந்து கொண்டு வேலை செய்கிறது. அந்த மயக்கத்தைப் போக்குவதற்கே சங்கரர் 'மோக முத்கர'த்தைப் பாடித் தந்தார். பஜ கோவிந்தம் பாட்டுக்குப் பரம்பரையாக வந்த பெயர் 'மோக முத்கரம்'. அதாவது 'மோகத்தை உடைக்கும் சம்மட்டி' என்பது.

## 14

சங்கரர் பாடிய பஜ கோவிந்தம் பாடல்களில் இதுவும் ஒரு பாட்டு!

செம்மண் துணியும் முழுத்தலை மொட்டையும்
அம்மணமும் நீள் சடையும் பிறவும்
சண்டாள வயிற்றுக்காம் வேஷம் பலவாம்
கண்ணுற் கண்டும் உணரானே மூடன்.

जटिलो मुण्डी लुञ्चितकेशः
काषायाम्बरबहुकृतवेषः।
पश्यन्नपि च न पश्यति मूढः
उदरनिमित्तो बहुकृतवेषः ॥ 14.

ஜடிலோ முண்டீ லுஞ்ச்சிதகேச:
காஷாயாம்பர பஹுக்ருதவேஷ:
பச்யன்னபி ச ந பச்யதி மூட:
உதர நிமித்தோ பஹுக்ருதவேஷ:

துறவு என்பது ஒரு வெளிவேஷமல்ல. அது உள்ளத்தில் நிறைவேற வேண்டிய ஒரு வெற்றியாகும். ஆயினும் நாம் உலகத்தில் பார்ப்பதென்ன? மழித்தலும் நீட்டலும் மற்றும் பல வெளிவேஷங்களும் பார்க்கிறோம். உள்ளத்தில் எரியும் ஆசைகள் தணியாமலிருந்தால் இந்த வெளிவேஷங்களினால் ஒரு பயனுமில்லை; துறவு வேஷங்களும் வயிற்றுப்பாடாய் முடிகின்றன. 'ஏன் வீண்வேஷம் போடுகிறாய்? வேண்டாம்' என்கிறார் சங்கரர்.

"மழித்தலும் நீட்டலும் வேண்டா உலகம்
பழித்தது ஒழித்து விடின்."

என்றார் குறளாசிரியர். காவி உடை உடுத்துச் சில

ஆண்டுகள் கழித்து உலக வியாபாரங்களில் மறுபடி கவனம் செலுத்திக் கோபமும் கவலையும் கொள்ளும் பல சந்நியாசிகளைப் பார்த்து வருகிறோம். துறவு பூண்டுவிட்ட போதிலும் செல்வாக்கு வேட்டையை முன் போலவே நடத்துவதும் அதற்காகத் துறவு நிலையையும் ஒரு சாதனமாகவே உபயோகிப்பதையும் பார்த்து வருகிறோம். இவையெல்லாம் மகா பாபம், துறவு மார்க்கத்துக்கே அபவாதம் கொண்டு வரும் துராசாரங்கள். துறவிகள் எவ்வாறாயினும் துறவு என்பது நம் முன்னோர்கள் கண்ட ஒரு பெருஞ்செல்வம். அதைப் பற்றிச் சந்தேகமில்லை. ஆனால் பக்குவமடையாமல் அவ்வழியில் பலர் இறங்கியதன் காரணமாகத் துறவு மார்க்கத்துக்கே கவுரவக் குறைவு உண்டாய் விடுகிறது.

## 15

**து**றவு என்றும் சந்நியாஸம் என்றும் சொல்லப் படும் உத்தம நிலையின் மூல அம்சம் துறத்தல். அது வெளிவேஷங்களில் இல்லை. உள்ளே வேலை செய்யும் ஆசைகளைத் துறத்தலே துறவு. இதை பகவத் கீதை மூன்றாவது அத்தியாயத்தில் மிகத் தெளிவாக பகவான் சொல்லாகவே பார்க்கலாம். எந்தக் காரியம செய்து கொண்டிருந்த போதிலும் உள்ளத்தில் துறவு நிலை இருக்க வேண்டும். எந்த வேஷம் போட்டிருந் தாலும் உள்ளத்தில் துப்புரவு இருக்க வேண்டும்; இருக்க முடியும்.

இதை ஆராய்ந்து ஆராய்ந்து பெரியோர்கள் சொல்லியிருக்கிறார்கள். நம்மைவிட மிக சுத்தமும் அறிவும் அவகாசமும் பெற்ற பெரியோர்கள் ஆராய்ந்து சொல்லியிருக்கிறார்கள். பகவானை எந்த

ரூபத்திலாவது தியானித்தால் — தகப்பனுக, அல்லது தாயாக, அல்லது ஆசாரியனுக அல்லது வேறு எந்த விதமாகவோ அன்புடன் தியானித்தால் — உள்ளம் துப்புரவு அடையும் என்று சொல்லியிருக்கிருர்கள். பக்தியின்றி உள்ளத்தில் துறவு ஏற்படாது. மாணிக்க வாசகர் பாட்டுக்களைப் படிததுப் பார்த்தால் இது தெரியும். மாணிக்கவாசகரைவிட நாம் அறிவு அடைந்துவிடவில்லை. அவர் அழுது அழுது பாடி யிருக்கிருர். பகவானை, தன்னைப் பெற்ற தாயாக, தகப்பனுக, அதைவிட நெருங்கிய உறவினனுக மாணிக்கவாசகரைப் போல் நாமும் உருகி அன்பு செலுத்த வேண்டும். செலுத்திஞல் ஓரளவு அறிவு பெறுவோம். ஆசைகளை அகற்றும் சக்தி ஓரளவு பெறுவோம். பக்தியின்றி வெறும் படிப்பிஞல் துறவு நிலை உண்டாகாது.

முதுமை ஏறிய பின்னரும் ஆசைப் பிண்டம் விட்ட பாடில்லையே என்று சங்கரர் பாடுகிருர்.

> நரம்பெல்லாம் நைந்தன மயிரெல்லாம் நரைத்தது
> குரங்கு முகமாச்சு பல்லும் இழந்தாச்சு
> கோலூனறி நடக்கிருன் தள்ளாடும் கிழவன்
> மேலும் மேலுமாசை இதற்கென்ன செய்வதையோ?

> अङ्गम् गलितम् पलितम् मुण्डम्
> दशनविहीनं जातम् तुण्डम् ।
> वृद्धो याति गृहीत्वा दण्डम्
> तदपि न मुञ्चत्याशापिण्डम् ॥ 15

> அங்கம் கலிதம பலிதம் முண்டம்
> தசன விஹீனம் ஜாதம துண்டம்
> வ்ருத்தோ யாதி க்ருஹீத்வா தண்டம்
> ததபி ந முஞ்ச்சத் யாசா பிண்டம்

## 16

மரத்தடி இருப்பிடம் எடுப்பது பிச்சை
இரவினில் மோவாய்ச் சேருது முழங்கால்
இவனையும் ஆட்டுது பேராசைப் பேய்
எவனையும் விடாதோ தீரா இந் நோய்?

अग्रे वह्निः पृष्ठे भानुः
रात्रौ चुबुकसमर्पितजानुः ।
करतलभिक्षस्तरुतल वासः
तदपि न मुंचत्याशापाशः ॥ 16

அக்ரே வன்னி: ப்ருஷ்டே பானுः
ராத்ரௌ சுபுகஸமர்ப்பிதஜானு:
கரதல பிக்ஷஸ் தருதல வாஸ
ததபி ந முஞ்ச்சத் யாசா பாச:

குளிர் தாங்கவில்லை கிழவனுக்கு: நடுங்குகிறான் சிக்கினபோது நெருப்பண்டை உட்காருவான். வெயில் காய்வான். ராத்திரியோ முழங்கால் நீட்டிப் படுக்க முடியவில்லை. நாளைச்சோறு நிச்சயமில்லை. ஆயினும் இவன் ஆசைகளோ கணக்கில்லை. ப்ரக்ருதியில் வைக்கப்பட்டிருக்கும் பற்றுக்களும் ஆசைகளும் மிக வேகம் கொண்ட சக்திகள். மனிதன் உடல் நைந்து போனாலும் அந்தப் பிசாசுகளின் வேதனை குன்றாது. அவற்றைத் தனியாய் நீ நின்று வெல்லுவது துர்லபம். ஆண்டவனை யழைத்து அவனையும் உன் கூட நிற்கச் சொல். அப்போது வெற்றியடைவாய். 'இதற்கெல் லாம் பகவானே நேரில் வரவேண்டுமா! அப்படி வரச் சொல்லுவதும் தகுமா?' என்று கேட்க வேண்டாம். ஆண்டவனை அழைக்கும் பக்தி நிலையின் பயனாகவே உனக்குச் சக்தி உண்டாகும். பிசாசுகளை எதிர்க்கும்

திறன் வந்து சேரும். நாம் பகவானைக் கூவி அழைப்பதால் அவனுக்கு ஒரு குறையுமில்லை. நாம் இரங்கி இறைஞ்சுவதே அவனுக்கு மகிழ்ச்சி. ப்ரக்ருதி வேகங்களைத் தாழ்த்துவதும் ஆன்ம சக்தி வெற்றியடைவதும் அவன் உதவியின்றி முடியாது.

## 17

அறிவு வேண்டும், ஞானம் வேண்டும் என்று எல்லா மதங்களும் எல்லா சம்பிரதாயங்களும் வற்புறுத்திக் கூறுகின்றன.

கங்கையில் குளித்துக் கடலில் மூழ்கி
எங்கேயும் போய் எந்த நோன்பு நோற்றும்
தானங்கள் பல செய்து புண்ணியம் பல சேர்த்தும்
ஞானத்தை அடையாது விடுதலை யில்லை
இமயகிரி முதல் குமரிவரை நிலைத்த
சமயங்களெல்லாம் சம்மதித்த திதுவே.

कुरुते गङ्गासागर गमनम्
व्रतपरिपालनमथवा दानम् ।
ज्ञानविहीनः सर्वमतेन
मुक्ति भजति न जन्मशतेन ॥ 17

குருதே கங்கா ஸாகர கமனம்
வ்ரதபரிபாலன மதவா தானம்
ஞான விஹீன: ஸர்வமதேன
முக்திம் பஜதி ந ஜன்மசதேன.

காசி யாத்திரையும், சேது ஸ்நானமும், பற்பல விரதங்களும், சிறந்த தானங்களும் செய்து

புண்ணியம் சம்பாதித்தாலும் மெய்யறிவு அடையாம லிருப்பவனுக்கு மோக விமோசனம் கிடையாது. உள்ளத் தூய்மையும் உண்மை பக்தியும் இருந்தால், இந்த ஸ்நான தான விரதங்கள் பயன்படும். இல்லா விடில் பயனில்லை.

ஞானவிஹீனனுக்கு முக்தியில்லை என்னும்போது ஞானம் அதாவது அறிவு என்றால் நூலாராய்ச்சியல்ல. பற்றுக்களை விலக்கி நிற்கும் உள்ளத்து நிலையே ஞானம். படிப்பு வேறு. ஞானம் வேறு. உயிரை அடிமைப்படுத்தி நிற்கும் மோகமும் பற்றும் இருந்த படியே நிலைத்திருந்தால் எவ்வளவு நூல்களை எந்தப் பாஷையில் படித்துப் பிறருக்கு விளக்கி உபந்நிய சித்து உரைக்கும் வல்லமை பெற்றாலும் அது மெய் யறிவு ஆகாது.

> "யாதனின் யாதனின் நீக்கியான் நோதல்
> அதனின் அதனின் இலன்"

என்ற உண்மையை அறிந்து படிப்படியாகப் பற்றுக் களை நீத்தலே அறிவு. ஞானமார்க்கம் என்பது அவா அறுத்தலினின்று வேறுபட்ட ஒரு குறுக்கு வழியல்ல. அவா அறுத்த மனோ நிலைக்கே ஞானம் என்று பெயர். விடுதலை அடைவதற்கு ஞானம் என்பது ஒரு தனிப் பட்ட உயர்தர மார்க்கம் என்று சிலர் எண்ணு கிறார்கள். அவ்வாறு எண்ணுதல் அறிவீனம். அவா அறுத்தால் ஞானம் தனக்குத்தானே உதயமாகும். அவா அறுக்காதவன் ஞானிஆகமாட்டான். ஆசைகள் ஒழிந்தால், அழுக்கு அடியில படிந்து நீர் தெளிவு அடைதல் போல அறிவு என்னும் தெளிவு இதயத்தில் உண்டாகும். ஞானத்துடன் கங்கா ஸ்நானம் செய்; ஞானத்துடன் சேது ஸ்நானம் செய்! ஞானத்துடன்

விரதங்கள் காத்து வா; ஞானத்துடன் தானங்கள் செய் என்கிருர் சங்கரர். உடலின் மூலம் செய்யப் பட்ட கடமைகளும் விரதங்களும் பயன் பெற வேண்டு மாஞல் உள்ளம் உடலுடன் கலந்து வேலே செய்ய வேண்டும். உள்ளம் கலந்து கொள்ளாத விரதமும் யாத்திரையும் பயனில்லே.

பள்ளிக்கூடத்தில் நூல்கள் நெட்டுருச் செய்து பாஸ் செய்யும் பரீட்சைகள் உண்டல்லவா? அந்தப் பரீட்சையில் ஞாபக சக்தியை வைத்துத் தேறிவிட லாம். சங்கரரும் கீதையும் சொல்லும் அறிவுக்கு ஞாபக சக்தி ஒரு பிரயோசனமுமில்லே. இலக்கணப் பிழையின்றித் தத்துவார்த்தம் பேசுவதும் பயனில்லே. வாழ்க்கை எப்படி நடத்துகிருய்? துக்கத்தை எப்படித் தாங்குகிருய்? இந்தப் பரீட்சையே மெய்யறிவுக்குப் பரீட்சை.

## 18

போகமும் சொத்தும் நீத்ததே செல்வம்
ராக விகாரம் காத்ததே இன்பம்
அன்ருெரு கோபுரவாயில்
இன்ருெரு மரத்தின் நிழல்
படுப்பது தரை உடுப்பது தோல்
தடுப்பார் யார்?
வேண்டாமையின் இன்பமே யின்பம்.

सुरमन्दिरतरुमूलनिवासः
शय्या भूतलमजिनम् वासः ।
सर्वपरिग्रहभोगत्यागः
कस्य सुखं न करोति विरागः ॥ 18

ஸுரமந்திர தருமூல நிவாஸ:
சய்யா பூதலமஜினம் வாஸ:
ஸர்வபரிக்ரஹ போகத்யாக:
கஸ்ய ஸுகம் ந கரோதி விராக:

"வேண்டாமை அன்ன விழுச்செல்வம் ஈண்டில்லை
ஆண்டும் அஃதொப்ப தில்"

என்ருர் திருவள்ளுவர்.

சுகம் என்பது உள்ளத்தில் இடம் பெறும் ஒருநிலை. அது வெளிப் பொருளில் அல்லது சரீரத்தில் இடங் கொண்ட ஒரு பொருளல்ல. அனுபவத்தைச் சொல்கிருர் சங்கரர். இது உலக விஷயங்களிலும் சிக்கி அலைந்து துறப்பதை அஞ்சித் துன்பமடையும் மக்களுக்கு உறுதி கூறும் மொழி. எப்படி விடுவது, பிறகு என்ன சுகம் என்று ஐயப்பட வேண்டாம். மோகங்களில் மனசை செலுத்தி ஆசைப்பட்டு, மெய், வருத்தப்பட்டுத் துன்பம் அடைந்து அலையவேண்டாம். துறப்பதிலுள்ள பூரண சுகம் வேறு வழிகளில் அடைய மாட்டாய் என்கிருர். இது சங்கரரைப் போன்ற ஒருவர் சொன்னுலல்லவோ உண்மையென்று ஒப்புக் கொள்வீர்கள். அனுபவத்திலடைந்த ஆனந்தத்தைப் பாடுகிருர்.

19

யோகத்திலிருப்பினும் ஒரு சுக வேகத்திலிருப்பினும்
கூட்டத்திலிருப்பினும் தனியிடத்திலிருப்பினும்
அகிலம் கடந்த மெய்ப்பொருளில் கலந்து
மகிழும் மகிழ்ச்சியே அாவிலா மகிழ்ச்சி.

योगरतो वा भोगरतो वा
संगरतो वा संगविहीनः ।
यस्य ब्रह्मणि रमते चित्तम्
नन्दति नन्दति नन्दत्येव ॥ 19

யோகரதோ வா போகரதோ வா
ஸங்கரதோ வா ஸங்கவிஹீன:
யஸ்ய ப்ரஹ்மணீ ரமதே சித்தம்
நந்ததி நந்ததி நத்தத்யேவ.

இன்பம் என்பது உள்ளத்தின் நிலை. புலனனுபவத்தில் உண்டாகும் மகிழ்ச்சி ஒருவகை இன்பம். ஆனால் இறைவனோடு கலந்துபோய் உள்ளத்தில் உண்டாகும் ஆனந்தம் வேறு. அதுவே குறைவிலா இன்பம். இதையே மாணிக்கவாசகா பாடினர்.

தினைத்தனை உள்ளதோர்
பூவினில்தேன் உண்ணுதே
நினைத்தொறும் காண்தொறும்
பேசுந்தொறும் எப்போதும்
அனைத்தெலும்பு உள்நெக
ஆனந்தத் தேன் சொரியும்
குனிப்புடையானுக்கே
சென்று ஊதாய் கோத்தும்பீ.

குனிப்புடையான்: நடராஜன்: ஈசன். 'கோத்தும்பீ' என்று விளித்தது உள்ளத்தை. வேறு தேனைத் தேடிச் சிற்றின்பங்களை அடைவதில் என்ன பயன்? மனமே! பேரானந்தத் தேன் சொரியும் ஈசன் என்ற பூவிலுள்ள தேனைத் தேடிக் குடிப்பாய் என்று ஆன்மாவை வண்டாக வைத்துச் சொல்லுகிறார்.

நந்ததி, நந்ததி, நந்ததி என்று சங்கரர் மூன்று முறை அடுக்கிச் சொன்னது ஆனந்தத்தின் இடை யருத தன்மையையும் உண்மை உறுதியையும் உணர்த்த. தியானத்தில் மூழ்கி நிற்காமலும் துறவி யாகாமலுமே உலக வாழ்க்கையிலிருந்த போதிலும், எந்தக் காரியத்தில் ஈடுபட்டிருந்த போதிலும் சித்தம் மெய்ப்பொருளோடு ஒட்டி நிற்பது முடியும். அப்படி நிலைத்த உள்ளத்தில் ஆனந்தம் குடிகொள்ளும் என்பது மகான்களின் அனுபவம். "ஆராத இன்பம் அருளும் மலை" என்று ஈசனைச் சொல்வது இதனாலேயே.

பக்தர்கள் கடவுளை எந்த உருவம் எந்தப் பெயர் வைத்துத் தியானித்துப் பக்தி செய்தாலும் ஒன்றே. சம்பிரதாய வேறுபாட்டினால் கெடுதல் ஒன்றுமில்லை. வழக்கப்பட்டு வந்த முறையில் பக்தி செய்தால் பக்தர் களுடைய உள்ளம் கரையும். உள்ளம் கரைவதுதான் முக்கியம். அதுவே பயன் தரும். உள்ளம் கரையாமற் போனால் எவ்வளவு நேரம் எந்த முறையில் பூஜை செய்தாலும் பயனில்லை. சிவன், திருமால் என்கிற வேறுபாடானது பெயர் மட்டிலுமே. அன்பும் உறுதி யான பக்தியும் சிலரைத் திருமால் சிவனுக்கு அடிமை என்றும் சிலரைச் சிவன் திருமாலுக்கு அடிமை என்றும் பாடச் செய்யும். அது அன்பின் வேகமே யொழியச் சிவனையாவது திருமாலையாவது பாதிக்காது. பரம் பரையாக வந்த நாமங்கள் அனைத்தும் ஒரு ஈசனுக்கு வைத்த பல பேர்கள். இதனால் நாம் குழப்பமடைய வேண்டியதில்லை. வாதவூரடிகள் திருவாசகம் பாடிய தும், நம்மாழ்வார் திருவாய்மொழி பாடியதும், சங்கரர் பஜகோவிந்தம் பாடியதும் அனைத்தும் கடந்த ஒரு பரமேசுவரனை நினைத்தே. கடவுள் என்பது பரமபொருளின் தமிழ்ப் பெயர். பெயர் வேறுபாடுகள்

மாத்திரமல்ல, பக்தியோடு மனத்தில் கற்பனை செய்து கொள்ளும் ரூபங்களின் வேறுபாடுகளும் அத்தகைய யனவே. ஒன்றுக்கே பல வடிவங்கள். எந்த நாமம் எந்த உருவம் பக்தனுக்கு ஆனந்தம் தருகிறதோ அதை அதை வைத்து வழிபடுகிறான்.

ஒரு நாமம் ஓருருவம் ஒன்று மில்லாற்கு ஆயிரம்
திரு நாமம்பாடி நாம் தெள்ளேணம் கொட்டாமோ

என்று பாடினார் மாணிக்கவாசகப் பெருமான்.

''என்னுடையாரமுது எங்கள் அப்பன்
எம்பெருமான் இமவான் மகட்குத்
தன்னுடைக் கேள்வன் மகன் தகப்பன்
தமையன் எம் ஐயன் தாள்கள்பாடி''

இதுவும் திருவாசகம். உமைக்கு நாயகன் ஈசன்; அவனே அவளுக்கு மகன் என்றும் தகப்பன் என்றும் தமையன் என்றும் இந்தப் பாட்டில் சொல்லப்படு கிறது! திருமால்தான் சர்வேசுவரன் என்று சிலரும், சிவனே சர்வேசுவரன் என்று வேறு பக்தர்கள் பாடு வதும் அவரவர்களுடைய பக்தி உரிமை. இது நம்மைக் குழப்பப்படுத்த வேண்டியதில்லை. நாமும் அவ்வாறே நமக்கு எது பிடிக்கிறதோ அதை வைத்துப் பக்தி செய்யலாம்.

''கொள்ளேன் புரந்தான் மால் அயன்
வாழ்வு குடி கெடினும்
நள்ளேன் நினது அடியாரொ
டல்லால் நரகம் புகினும்''

என்றெல்லாம் பாடுவதின் பொருளென்ன? தான் மனத்தில் பதியவைத்த உருவத்தைத் தவிர்த்துப் பிற எல்லாத் தெய்வங்களையும் குறைத்துப் பேசுவது

சண்டைக்காக அல்ல. உள்ளத்தில் ஊறும் பக்தியை ஒரு வழியில் செலுத்தி அதன் வேகத்தைப் பெருக்கு வதற்கு இது ஒரு வழியாகும். பிற தெய்வங்களைத் தாழ்த்திக் கூறுவதின் நோக்கம் இதுவேயன்றிப் பேத எண்ணம் அல்லது அறியாமை அல்ல. மகா ஞானி களுக்கு இவ்வித அறியாமை எப்படியிருக்கும்? "ஆயன் நான் மறையவன் நீயே ஆதல் அறிந்து" என்று மாணிக்கவாசகர் சொன்னதின் பொருள் என்ன? சங்கரர் "த்யேயம் ஸ்ரீபதிரூபம் அஜஸ்ரம்" என்று பாடினதும் "ஓயாதே உள்குவார் உள்ளிருக்கும் உள்ளானை மாது இருக்கும் பாதியனை" என்று மாணிக்கவாசகர் :பாடினதும் மொழிககு மொழி ஒரே பொருள். ஒன்று திருமால் உருவத்தைத் தியானித்துச் சொன்னது, மற்றொன்று பரமசிவனைத் துதித்துப் பாடியது. பரம்பொருள் எந்த உருவத்திலும் ஒன்றே: இந்த உண்மையை நன்முக அனுபவித்து உபதேசித்து வந்தார் ராமகிருஷ்ண பரமஹம்ஸர்.

## 20

சிறு அளவேனும் பகவத்கீதை ஓதி
ஒரு துளியேனும் கங்கைநீர் அருந்தி
ஒரு கணமேனும் எப்போதேனும்
திருமால் வழிபட்டிருந்தாயேல்
ஒருவித பேச்சும் வாதமுமில்லை
வரும் யமனுக் குன்னண்டை

भगवद्गीता किंचिदधीता
गङ्गा जललवकणिका पीता ।
सकृदपि येन मुरारि समर्चा
क्रियते तस्य यमेन न चर्चा ॥ 20

பகவத்கீதா கிஞ்சித அத்ஹீதா
கங்கா ஜலல்வ கணிகா பீதா
ஸக்ருதபி யேன முராரி ஸமர்ச்சா
க்ரியதே தஸ்ய யாமன ந சர்ச்சா.

முராரி அல்லது கோவிந்தனை ஒரு தடவையாவது பக்தியுடன் வழிபடுவாயேல் மீள்வாய் என்கிறார்.

பக்தி, அறிவு, நோன்பு எல்லாம் இந்தப் பாட்டில் ஒன்றாகக் கலந்து ஞானத்தின் கரையைக் கண்ட ஆச்சாரியர் பாடிவிட்டார். "கிஞ்சித் அத்ஹீதா" 'கொஞ்சமேனும் படி; அது போதும்' என்கிறார். கங்கை நீர் 'ஒரு துளி குடி' என்கிறார். கங்கை நீரைப் போலவே கீதையும். ஒரு துளி குடித்தாலும் போதும். கொஞ்சம் படித்தாலும் போதும். கங்கை முழுவதையும் குடிக்க வேண்டுமா அல்லது குடிக்க முடியுமா? இல்லை. 'எப்போதேனும் கோவிந்தனை நினை போதும். பின் மரணத்தை எண்ணிப் பயப்பட வேண்டியதில்லை' என்கிறார். இறையவன் "அடியார்க்கு எளியான்", "குற்றங் களைந்து குணங்கொண்டு கோதாட்டுபவன்" "பணிவார் பிணி தீர்ப்பான்", "இன்னிசை வீணையின் இசை போன்றவன்" என்றெல்லாம் அறிவு முதிர்ந்த தென்னாட்டுப் பக்தர்களும் பாடியிருக்கிறார்களல்லவா?

## 21

பொறுப்பது கஷ்டம்! அருள்வாய் முராரி!
பிறப்பது மிறப்பதும் மறுபடி பிறப்பதும்
கரைகாணேன் பிறவிக் கடலுக்கு,
சரணம் சரணம் காப்பாய்! காப்பாய்!

पुनरपि जननम् पुनरपि मरणम्
पुनरपि जननीजठरे शयनम्
इह संसारे बहुदुस्तारे
कृपया पारे पाहि मुरारे ॥ 21

புனரபி ஜனனம் புனரபி மரணம
புனரபி ஜனனீஜடரே சயனம்
இஹ ஸம்ஸாரே பஹுதுஸ்தாரே
க்ருபயா பாரே பாஹி முராரே

என்று அடுத்த பாட்டில் பாடுகிறார். இறைஞ்சினால் அவன் காப்பான். பிறவிக் கடலைக் கடத்துவான். ஐயமில்லை. அவன் அவளுக்கு வரம்பில்லை. அவன் அருளின்றி வேறு காப்புமில்லை என்று ஞானமூர்த்தி சங்கரரே அழுதாரானால், கொஞ்சம் படித்துவிட்டு மிக ஆடும் நம்மைப் போன்ற மூடர்களுக்கு என்ன பேச்சு இருக்கிறது? கோவிந்தனை பஜிப்போம், பஜித்து மீள்வோம். வேறு வழிகளும் யோசனைகளும் என்னத்துக்கு? இதுவே கீதா சுலோகம்.

ஸர்வ தர்மான் பரித்யஜ்ய மாமேகம் சரணம் வ்ரஜ
அஹம் த்வா ஸர்வ பாபேப்யோ மோக்ஷயிஷ்யாமி மா சுச:

மா சுச: என்றால் துயரப்பட வேண்டாம். இது பகவான் சொல்.

## 22

கடவுள் பித்தைப் பற்றியும் ஞானிகளின் ஆனந்தத்தைப் பற்றியும் சங்கரர் பாடுகிறார்.

புண்ணியம் தேடமாட்டான் பாவமும் செய்யான்
கண்ணனில் கரைந்து போச்சு இந்தப் பித்தனின் சித்தம்
குப்பைக் கந்தலும் நந்தி யதுவே நல்லாடை—யென்பான்
எப்பவு மானந் தமனத் தானந்தமிவ னுள்ளம் .

रथ्याकर्पटविरचितकन्थः
पुण्यापुण्यविवर्जितपन्थः ॥ 22
योगी योगनियोजितचित्तः
रमते बालोन्मत्तवदेव ॥

ரத்யா கர்ப்பட விரசித கந்த்த:
புண்யா புண்ய விவர்ஜித பந்த்த:
யோகீ யோக நியோஜித சித்த:
ரமதே பாலோன்மத்தவத் ஏவ:

குற்றமறியாது குழந்தையின் உள்ளம். உலகத்தை மதியாது பித்தனின் உள்ளம். இவை இரண்டும் ஒன்று கலந்தாற்போல் இருக்கும் யோகியின் உள்ளம். இதைத்தான் சங்கரர் "பால உன்மத்தவத்" என்கிறார்.

பட்டினத்தார் முதலிய தமிழ்ப் பக்தர்கள் இந்த மகிழ்ச்சியில் ஆடிப் பாடியிருக்கின்றனர்.

அனைவருக்கும் இந்த நிலை அடைய முடியுமா? முடியாது. பக்குவமடையாமல் இந்த நிலையின் ஆனந்தத்தை அடையப் பார்த்தால் வெறும் வேஷமாக முடியும். இந்த யோகானந்த நிலை வருங்கால் வேண்டாமலே வரும். முந்திச் செய்ய வேண்டியதைச் செய்தால் பிந்தி வருவது தானாக வரும். முந்திச் செய்ய வேண்டியது என்னவென்றால் மனதை வஞ்சித்தாளுகின்ற புலன்களாகிய மூர்க்கரோடு முயல்வது. முயன்று வெல்லுவதற்குப் பக்தி வேண்டும். முன் செய்த வினைகளின் பயனை விலக்க அதுவன்றி வேறு வழியில்லை. பக்தி நெறியை உண்மையில் அவலம்பித்தால் சித்தத்தின் மலம் நீங்கும். உள்ளம் மலம் நீக்கிச் சிவமாகும். தன்னைத்தான் பெறும். பிறகு

உவமையில்லாத "பால உன்மத்தவத்" ஆனந்தம அத்தன் அருளால் தானாக உதயமாகும் — மாணிக்க வாசகர் அச்சோப் பதிகத்தில் மகிழ்ந்து வியந்து பாடியவாறு.

## 23

இரவில் தூங்கும்போது கனவு காண்கிறோம். அந்தக் கனவில் பல துன்பங்களும் கவலைகளும் அனுபவிக்கிறோம். அந்தச் சமயம் நாம் படும் துக்கம் பெரிதாயினும் விழித்ததும் ஒன்றுமில்லை யெனத் தெரிந்துகொண்டு கவலை தீர்க்கிறோம். இவ்வாறே வாழ்க்கையின் விசாரமும் ஒரு 'சொப்பனத்து விசாரம்' என்று எடுத்துக் காட்டுகிறார் ஆசாரியர்:

என்னே ஈதெல்லாம்? நான் ஆர் நீ யார்?
அன்னை யார் அப்பனார் யாதெம்மூர்?
ஒன்றுமில்லை இங்கே தேடும் பொருளெனக்
கனவின் கவலைகளைத் துறப்பாய் மனமே.

कस्त्वं कोऽहं कुत आयातः
का मे जननी को मे तातः ।
इति परिभावय सर्वमसारम्
विश्वं त्यक्त्वा स्वप्नविचारम् ॥ 23

கஸ்த்வம் கோஹம் குத ஆயாத:
கா மே ஜனனீ கோ மே தாத:
இதி பரிபாவய ஸர்வம ஸாரம்
விச்வம் த்யக்த்வா ஸ்வப்ன விசாரம்.

"நான்" "நான்" என்று பொருளை வைத்துக் கொண்டு பயமும் சங்கடமும் கோபமும் படுகிறோமே, அந்த 'நான்' என்பதென்ன? யோசித்துப்பார் என்கிறார் சங்கரர். நீ யென்பதும் நான் என்பதும் உடலுள்ள வரை யன்றோ? தாய் என்றும் அப்பனென்றும் அன்பு செய்யும் உயிர்கள் முன் யாராயிருந்தார்கள்? நீ யாராய் இருந்தாய்? இதற்கு முன் எத்தனை தாயின் வயிற்றில் தோற்பைச் சிறைவாசம் செய்தாய் நீ? அந்தத் தாய் மார்களை நீ இப்போது கண்டாயா? கண்டால் அன்பு செலுத்துவாயா? எந்தப் பொருளினின்று பிரிந்து வந்த பொருள் நீ உலகில் புலனாகும் அனைத்தும் மாய வடிவங்கள் கொண்ட ஒரே பொருள். அந்தப் பொரு ளைக் காணாமல் அதனின்று உண்டாக்கிய மாய வடிவத் தைக் கண்டு விரும்பியும் வெறுத்தும் மையல் கொண்டும் அலைகிறாய். இந்தக் கனவினின்றும் விழித் தெழு. கண்ணைத் திறந்து மெய்ப் பொருளைக் காண முயல்வாய். உன் கவலைகள் தீரும் என்கிறார். கர்மத் தினால் உண்டான மாயம் பக்தியினால் தீரும், விடுதலை யடைவாய். கோவிந்தனைப் பஜித்து முக்தி அடை என்கிறார்.

## 24

**யா**ரைக் கோபிக்கிறாய்? ஏன் உள்ளத்தில் வீணே விரோதத்தைக் கற்பித்துக்கொண்டு துயரப்படுகிறாய்? உயிர்களெல்லாம் நம் கோவிந்தன் கோயில் அன்றோ? உன் உயிரும் நீ சண்டையிடும் தம்பியின் உயிரும் ஒன்றேயன்றோ?

**என்மேல் ஏன் உன் கோபம் அண்ணே?**
**தன்னையே தான் வெறுத்தல் விவேகமோ?**
**என்னுயிருக்கும் உயிராவான் கோவிந்தன்**
**உன்னுயிர்க்கும் அவனே உயிரன்றோ!**

யாதுமோர் உயிர் எதிலுமோருயிர்
ஏதுயிரும் கோவிந்தன் கோயிலே அன்றோ?
யாது பொருளுமில்லை உன் வெறுப்பில் அண்ணே
பேத எண்ணம் நீத்தெங்கும்ஒருயிரைக் காண்.

**त्वयि मयि सर्वत्रैको विष्णुः**
**व्यर्थं कुप्यसि मय्यसहिष्णुः ।**
**सर्वस्मिन्नपि पश्यात्मानम्**
**सर्वत्रोत्सृज भेदाज्ञानम् ॥ 24**

த்வயி மயி ஸர்வத்ர ஏகோ விஷ்ணு:
வ்யர்த்தம் குப்யஸி மய்யஸஹிஷ்ணு:
ஸர்வஸ்மின்னபி பச்யாத்மானம்
ஸர்வத்ரோத்ஸ்ரிஜ பேதாஜ்ஞானம்.

## 25

பகையென்றும் நட்பென்றும் பாராதே
மகனென்றும் உறவென்றும் மயங்காதே
சிவனடி சேரவேண்டின் சீக்கிரமே
எவனின் றகல்வதும் வேண்டாம்
சேர்வதும் வேண்டாம் நட்பென்று
யார் மாட்டும் நிற்பாய் ஒன்றுபோல.

**शत्रौ मित्रे पुत्रे बन्धौ**
**मा कुरु यत्नं विग्रहसन्धौ ।**
**भव समचित्तः सर्वत्र त्वम्**
**वाञ्छस्यचिराद्यदि विष्णुत्वम् ॥ 25**

சத்ரௌ மித்ரே புத்ரே பந்தௌ
மா குரு யதனம் விக்ரஹ ஸந்தௌ
பவ ஸமசித்தஸ் ஸர்வத்ர த்வம்
வாஞ்சஸ்யசிராத் யதி விஷ்ணுத்வம்.

நட்பும் பகையும் பற்றுக்களை நீட்டிக் கொண்டே போகும். பற்றினின்று துக்கமும் மையலும் பெருகிக் கொண்டே போகும். பற்றுக்களைக் குறைத்துக் குறைத்து விடுதலையடைய வேண்டும் என்பது நிச்சயம். ஆகையால் யார் மாட்டும் உள்ளத்தை நடுநிலையில் நிறுத்தி எங்கும் பரவி நிற்கும் கடவுளைக் காணவேண்டும். சமசித்தத்தைப் பயிலவேண்டும். அந்தப் பயிற்சியானது ‘‘விஷ்ணுத்வம்’’ என்று சங்கரர் சொல்லும் முக்தி நிலையைத் தரும்.

இது முடியுமா? நட்பும் பகையும் கொள்ளாம லிருக்க முடியுமா? சங்யாசிகளுக்கு ஒரு வேளை முடியும். உலக வாழ்க்கையிலிருக்கும் நமக்கு இது சாத்தியமா? கோபத்துக்கு எவ்வளவு காரணங்கள் இருக்கின்றன? அவற்றையெல்லாம் மறக்க முடியுமா? என்றிவ்வா றெல்லாம் கேட்கத் தோன்றும். மறப்பது கஷ்டம், உண்மை. கோபம் உள்ளே இருக்க இல்லையென்று வேஷம் போடுவதில் பயனில்லை. மறப்பது கஷ்டமே யாயினும் இதற்கு மருந்தும் சங்கரர் சொல்லுகிறார். கோவிந்தனே எல்லா உயிரிலு மிருக்கிறான் என்பதை அடிக்கடி மனத்தில் நினைப்பூட்டிக் கொள்ளவேண்டும். அவ்வாறு அடிக்கடி தியானித்து, ‘‘நான் என்னவெல் லாம் தவறுகள் செய்திருக்கிறேன், பிறருக்குத் தெரி யாத எத்தனை குற்றங்கள் நான் என் உள்ளத்தில் செய்து மறைத்திருக்கிறேன்? என்னைப் போலவே பிறரும். அவர்களுடைய தவறும் ஆண்டவன் லீலை. கோவிந்தனுடைய விளையாட்டு பலவாறு நடக்கும். அதற்கு நான் கோபித்து என்ன பயன? வருத்தப்பட்டு என்ன பயன்?’’ என்றிவ்வாறு மனத்துக்குச் சொல்லிக் கொண்டு கோபத்தையும் வெறுப்பையும் அடக்கியாள வேண்டும். ஒன்றை மறக்கவேண்டுமானால் வேறொரு

நல்ல விஷயத்தை மனத்தில் புகுத்தி உள்ளத்தை நிரப்பவேண்டும். அதற்குத்தான் கோவிந்தனைப் பூஜிக்கவேண்டும் என்பது.

"என்னுடைய குற்றங்களும் பாவங்களும் எவ்வளவோ இருக்க, அதற்காகக் கோவிந்தனை வழிபட்டு நற்கதி அடைய வேண்டியிருக்க, மற்றவர்களுடைய குற்றங்களையா நான் யோசித்துக் கொண்டிருப்பது? அதனால் சுகமும் இல்லை, துயரமே அனுபவிக்கிறேன். காலமும் கழிந்து போகிறது. சீக்கிரம் என் உள்ளத்தை நான் துப்புரவாக்க வேண்டும். கோவிந்தனை சரணடைந்தாலன்றோ அது முடியும்" என்று இரவும் பகலும் செய்ய வேண்டிய கடமைகளைச் செய்து முடித்த பின், அவகாசமிருக்கும் போதெல்லாம், ஒழிந்த நேரமெல்லாம் கோவிந்தனைத் தியானிப்பாய் என்பது சங்கருடைய உபதேசத்தின் கருத்து. ஒரு காரியம் நிறைவேற வேண்டுமானால் அதற்கு வேண்டியதைச் செய்தால் அல்லவோ முடியும்? கோவிந்தனைத் தியானிப்பது பக்தி மட்டுமல்ல; சாமர்த்தியமுமாகும்.

## 26

க்ஷேமம் உனக்குச் சொல்லுவேன்
காமம் வேண்டாம் கோபம் வேண்டாம்
ஆபத்தினின்று தப்புவாயேல் அகற்றுவாய்
லோபத்தை ஒழிப்பாய் மோகத்தை
இந்த நான்கையும் ஒழித்தமர்ந்தே
சிந்திப்பாய் நான் என்னும் பொருளை
உண்மை ஞானம் அடையாப் பேதையர்
இம்மையிலும் வெகுவார் நரகத்தில்

कामम् क्रोधम् लोभम् मोहम्
त्यक्त्वात्मानम् भावय कोऽहम् ।
आत्मज्ञानविहीना मूढाः
ते पच्यन्ते नरकनिगूढाः ॥ 26

காமம் க்ரோதம் லோபம் மோஹம்
த்யகத்வாத்மானம் பாவய கோஹம்
ஆத்ம ஞான விஹீனு மூடா:
தே பச்யந்தே நரக நிகூடா:

மனிதன் உள்ளத்தில் ஓர் ஆசை உண்டாகிறது. அதைத் தீர்த்துக் கொண்டால் பிறகு சுகமாக இருக்கலாம் என்று எண்ணுகிருன். அதற்காகப் படாத பாடு படுகிருன். ஆனுல் ஆசையின் படிகளுக்கோ முடிவேயில்லே. முடிவில்லே என்று அறிந்து கொள்வதற்கும் அது இடந்தராது. சுற்றும் சக்கர வட்டமான ஓர் ஏணியின் மேல் ஏறப் பார்க்கிறேம். ஏற ஏற சக்கரம் கீழே போகிறது. மேலே ஏறுவதுபோல் தோன்றும். ஆனுல் ஒரு படி ஏறியதும் ஏறிய படி கீழே போய் விடும். புதுப் படி வந்து நிற்கும். படிகளுக்கு முடிவேயில்லே. சிரமத்திற்கும் முடிவேயில்லே. சாகும் வரை ஏறுவதே வேலே. ஒன்றை அடைந்துவிட்டு அதற்குப் பின் சும்மா இருக்கலாம் என்று எண்ணுவோம். ஆனுல் அவ்வாறு தீர்த்துக்கொள்ள முடியாது. புது ஆசை உண்டாகும். ஆசையின் கதை இதுவே.

ஆசை தீர்த்துக் கொள்ளப் பார்க்கும்போது தடை ஏற்படும். அதனுல் கோபம் கிளம்புகிறது. மனிதனுக்குக் கோபம் என்பது ஒரு கெட்ட பகை. அதனுல் துவேஷம் உண்டாகிறது. பிறருக்கும் துன்பம்;

தனக்கும் துன்பம். துன்பப்படத் துன்பப்படக் கோபம் அதிகரிக்கும். உடலில் ஒரு நோய வந்தால் அது தொந்தரவு செய்துவிட்டுப் பிறகு ஓய்ந்து போகிறது. இது நோயின் இயல்பு—கோபம் அவ்வா றல்ல. துன்பம் உண்டாக்கி உண்டாக்கி வளர்ந்து கொண்டே போகும். ஓயாது.

ஆசைகள் பலவிதம். சில ஆசைகளைச் சொல்லிக் கொள்ள வெட்கப்படுவோம். சில ஆசைகளைப் மிகப் பெருமையாகக் காட்டிக் கொள்வோம். ஆனால் அவற் றின் குணம் எல்லாம் ஒன்றே! எவ்வளவு விறகு போட் டாலும் அந்த நெருப்பு எரிந்துகொண்டே யிருக்கும். தீனி போட்டு அணைக்க முடியாது. இன்னும் வேண்டும், இன்னும் வேண்டும் என்றே கேட்கும். தீனி போடுவதனால் பசி அதிகரிக்கும். பசி தீராது.

இன்பம் நுகரும் புலன்களின் சக்திக்கு ஒரு வரம்பு உண்டு. ஆனால் சக்தி தீர்ந்து போனாலும் ஆசை தீராது. இது ஒரு பெரும் வியப்பு. புலன்களின் சக்தி குன்றி முடிந்து போனாலும் ஆசைக்கு இறுதியே யில்லை. அது வேதனை செய்து கொண்டேயிருக்கும். அதனால்தான் ஆசையை ராக்ஷசன் என்பார்.

பொருளாசைக்கு சம்ஸ்கிருதத்தில் லோபம் என்று பெயர். ஆண், பெண் கலவியின்ப விருப்பத்தினால் உண்டாகும் மனக் கலக்கத்துக்குக் காமம் என்று பெயர். குரோதம் இவை யிரண்டினின்றும் வளரும். குரோதத்தினின்று எல்லாவிதப் பாவங்களும் உண்டா கும். கோபம் என்பது மனிதனை எதையேனும் செய்யச் சொல்லும். அவனுடைய விவேகத்தை அழித்துவிட்டு மனிதனை மிருகமாக்கி விடுகிறது.

அதருமமான ஒரு ஆசை மனத்தில் உற்பத்தி ஆகும் போதே தாமதமின்றி அதை அப்போதே அகற்ற வேண்டும். "போ!" என்ருல் போகாது. நம் உள்ளத்தை வேறு விஷயத்தில் செலுத்த வேண்டும். அப்படிச் செய்தால்தான் அதற்கு இடமில்லாமல் விலகும். வேறு நல்ல எண்ணங்கள் எண்ணிஞல் கெட்ட எண்ணம் உள்ளே புகுவதற்கு வழி அடை பட்டுப் போகும். உள்ளத்தினுடைய அமைப்பின் பெரிய ரகசியம் இது. மனிதன் உள்ளம் உலகமெல் லாம் பாயும். ஆனல் ஒரே சமயத்தில் அதனில் இரண்டுக்கு இடமில்லை. எந்த விஷயமும் மனம் முழுவதையும் நிறைத்துவிடுகிறது. நல்லது ஒன்றை வைத்துக்கொண்டு மனத்தைப் பூரணமாக அதில் செலுத்திஞல் மற்றென்று தானுகவே அகற்றப்படும்.

இந்த மனேதரும ரகசியத்தைப் பயன்படுத்திக் கொண்டு தீய எண்ணங்கள், ஆசைகள் இவற்றை அகற்ற வேண்டும். கொஞ்சம் இடம் கொடுத்தோமோ கெட்டோம். 'நம்முடைய உள்ளத்தினுக்குள் மறைந் தல்லவோ இருக்கிறது? இது யாருக்கும் தெரிய வேண்டியதில்லை' என்று அலட்சியம் செய்தோமோ நிச்சயம் கெட்டுப் போவோம். அதற்கு அடிமையாகிப் போவோம். பிறகு உடும்புப் பிடியாகப் பிடித்துக் கொள்ளும். மனத்தில் இடம் பெற்ற எண்ணம் பிறகு காரிய ரூபமாகிவிடுவது மிக எளிது. காரியமாகத் தோற்ற மெடுக்காவிட்டாலும் அசுத்த எண்ணமே பெரும் பாவம். நம்முடைய உள்ளத்தின் சுத்தியை நாசம் செய்து தீர்க்கும். ஆண்டவன் இருக்கும் இடத்தை அசுத்தப்படுத்தி, கோயிலைத் தீட்டாக்கிய பெரும் பாவம் செய்தபடியாகும்.

பாட்டில் காமம், குரோதம், லோபம், மோகம் என்று சொல்லப்பட்ட நான்கினில் மோகம் என்பது என்னவென்றால், உலக வாழ்க்கையில் பொருளுக்கு நாம் இடும் தவறான மதிப்புகள். இது மேன்மை; இது தாழ்மை; உண்மையான சுகம். இது தரும், இது தராது; இது நல்லது, இது கெட்டது; இது விரும்பத் தக்கது, இது வெறுக்கத்தக்கது என்று பொருள்களின் உண்மைக் குணங்களை அறியாமல், கடையில் குழந்தையோ அல்லது உலக அனுபவமில்லாத ஆணோ பெண்ணோ போய்ச் சாமான்கள் வாங்கினால் எப்படி வெளித்தோற்றத்தைப் பார்த்து மோசம் போவார்களோ அதைப்போல் நாம் பிழைகள் செய்து பயனற்ற பொருள்களுக்குப் பாடுபட்டு, சுகம் தரும் வழியை விட்டுவிட்டு வாழ்க்கை நடத்துகிறோம். மக்களுடைய புகழுரைக்கு மிக ஆசைப்படுகிறோம். அவற்றில் சாரமில்லை என்று தெரியும். அந்தப் பேச்சுக்கள் பொய்யென்று நன்றாக அறிந்திருந்தாலும்கூட அதில் ஏதோ நன்மையிருப்பதாக எண்ணி அதற்காக வெகுவாகப் பாடுபடுகிறோம். இதைப் போலவே வேறு பல விஷயங்களும். பொருள்களின் உண்மை மதிப்பு அறியாமல பொய்யான விலையிட்டு நஷ்டப்படுவதற்குப் பெயர் மோகம்.

காமம், குரோதம், லோபம், மோகம் என்பவையெல்லாம் ஆசை என்னும் ஒரு பிசாசின் பல உருவங்கள். ஆசை என்றால புலன்கள் வழியாக அடையும் மகிழ்ச்சிகளை விரும்புவதற்குப் பெயர். தருமத்துக்கு விருத்தமாகாத ஆசையைப் பற்றிச் சொல்லவில்லை. தருமத்துக்கு முரண்படாத விருப்பங்களை நீக்க வேண்டியதில்லை. உலக வாழ்க்கையில் நாம் செய்ய வேண்டிய கடமைகளைச் சரியாகச் செய்து தீர்ப்ப

தற்கு உள்ளத்தில் உண்டாகும் விருப்பமும் உற்சாக மும் காமம் அல்ல. அந்த விதமான ஆசை தருமத் துக்குப் பகையல்ல. அது தருமத்துக்குள் இசைந்த விருப்பம். இத்தகைய நல்ல ஆசை பரம்பொருளின் அம்சமேயாகும். அதுவே நம்முடைய உள்ளத்தின் ஆன்மசக்தி. உலகெலாம் பரவி நிற்கும் பராசக்தி யின் வேகத்தில் அதுவும் ஒரு பாகம். கீதையில் அருச்சுனனுக்குக் கண்ணன் சொல்லுகிறான்:

“காமமும் ரஜோவேகமும் நீங்கிய சக்தியை மக்க ளிடத்தில் கண்டால் அந்த சக்தி நானே என்று அறிவாய். தருமத்துக்கு முரண்படாத ஆசை மனிதர் களின உள்ளத்தில் தோன்றினுல் அந்த ஆசை நானே என்று அறிவாய்.”

தருமத்துக்கு முரண்படாத நல்ல விருப்பங்களெல் லாம் ஈசனுடைய அம்சமாகவே கருதவேண்டும். மேலும் கவனிக்கவேண்டிய விஷயம் ஒன்று உண்டு இதுவும் பகவத் கீதையில் மிக அழுத்தத்துடன் சொல்லப்பட்டிருக்கிறது. எல்லாக் குறறங்களையும் அறவே ஒழிக்க முடியவில்லை என்று பயந்து எத்தனம் செய்வதையே விட்டுவிடக் கூடாது. மனத்தை நல்ல வழியில் நிறுத்த முயற்சி செய்தால் சில சமயம் எண்ணிய பயனைப் பெருதிருந்தாலும் மொத்தத்தில் அந்த முயற்சியே ஒரு நல்ல பயன் தரும். எல்லாக் குற்றங்களையும் நீக்கு என்று சங்கராசாரியார் சொல்லு கிருர். அது முடியவில்லையாயினும் முயறசி செய் ததே போதும், அது அளவுக்கு நிச்சயமாகப் பயன் தரும். ஒரு பாவ எண்ணத்தில் ஏமாந்து போகலாம். ஆனுல் அந்தப் பாவ எண்ணத்தை எதிர்த்துச் செய்த முயற்சியின் பயனுகப் பதது பாவத்தினின்று மீள்

வோம். முயற்சியே உள்ளத்துக்குப் பலம் தருகிறது— தேகப் பயிற்சி உடலுக்குப் பலம் தருவதுபோல். இது இயற்கையில் ஒரு பேருண்மை.

இந்த முயற்சிக்கு வழியும் சங்கராசாரியார் பாட்டில் காட்டியிருக்கிறார். "நான் யார்" என்கிற கேள்வியை அடிக்கடி கேட்டுச் சிந்திப்பாய் என்கிறார். இந்தச் சிந்தனை மனத்தில் வேலை செய்து கொண்டிருந் தால் ஆசைக்கும் கோபத்துக்கும் இடமிருக்காது. ஆத்மாவின் உண்மை இயல்பை நினைவில் அவ்வப் போது தருவித்து வைத்துக் கொண்டிருந்தால் வாழ்க் கையில் ஏற்படும் கஷ்டங்களைப் பொறுத்துக் கொள் ளும் சக்தி உள்ளத்தில் உண்டாகும். கோபம் அடங் கும். துயரங்கள் குறையும்.

அப்படிச் செய்யாமல் ஆசைகளையும் மோகத்தை யும் கோபத்தையும் வளரவிட்டுக்கொண்டே போனால், உலக வாழ்க்கையே மிகக் கஷ்டமாகித் துக்கமும் துயரமும் பெருகி அவற்றைத் தாங்கும் ஆத்ம பலம் குறுகிப்போய் இம்மையிலேயே நரகத்தை அனுபவிக்க வேண்டியதாகும். ஆன்ம ஞானம் என்பது துறவி களுக்கு இன்றியமையாதது. ஆனால் இல்லறம் நடத் தும சம்சாரிகளுக்கும் அது அவசியம் வேண்டும். அதிகமாகவே வேண்டும்.

## 27

முந்திய பாட்டின்மேல் விளக்கப்பட்டது; மெய் யறிவில்லையேல் துயரம் நிறைந்த இந்த உலக வாழ்க் கையே நரகமாகும். இம்மையே நரகம்போல் துன்பம் தரும். ஆன்ம ஞானம் இந்த வாழ்க்கையின் கவலை களையும் துக்கங்களையும் பொறுத்துக் கொள்ள

வேண்டிய சக்தியைத் தரும். ஆன்ம ஞானத்தை அடைவது எப்படி என்று அதற்குமேல் சொல்லுகிறார்.

பாடுவாய் ஹரிநாமம் ஓதுவாய் கண்ணனின் கீதை
தேடுவாய் ஈசனுருவம் இடைவிடா பாவனையால்
நல்லோர் மாட்டிலே மனத்தை நிறுத்து
செல்வம் உண்டேல் ஏழைக்குதவு
சுருக்கமாய்ச் சொன்னேன், பெருக்குவதேன்.

गेयम् गीतानामसहस्रम्
ध्येयम् श्रीपतिरूपमजस्रम् ।
नेयम् सज्जन सङ्गे चित्तम्
देयम् दीनजनाय च वित्तम् ॥ 27

கேயம கீதா நாம ஸஹஸ்ரம்
த்யேயம் ஸ்ரீபதிரூப மஜஸ்ரம்
நேயம் ஸஜ்ஜன ஸங்கே சித்தம்
தேயம் தீன ஜனாய ச வித்தம்.

"ஓயாதே யுள்குவார் உள்ளிருக்கும் உள்ளானை. மாதிருக்கும் பாதியனை" என்று மாணிக்கவாசகர் அம்மானைப் பாட்டுப் பாடினார். "த்யேயம் ஸ்ரீபதிரூபம் அஜஸ்ரம் — ஓயாது பாவனை செய் லக்ஷ்மீபதியை"— என்றார் சங்கரர். 'தாயான தத்துவன்', 'உமையொரு கூறன்', 'லக்ஷ்மீகாந்தன்', 'ஸ்ரீபதி'—இவையனைத்தும் ஒரு பொருளையே உணர்த்தும் ஈசனுக்குப் பக்தர் களிட்ட திருநாமங்கள். சிவன் வேறு விஷ்ணு வேறு; உமை வேறு லக்ஷ்மி வேறு என்று சம்பிரதாய வாதங் களிலும் வழக்கமான மோகத்திலும், கோபத்திலும் அலையாதீர்கள்.

உருவத்தைப் பாவித்து உருகுவதே கடவுளைத் தேடும் முயற்சி. உண்மை அன்பின் அடையாளம் இடைவிடாப் பாவனையாகும்.

உன் சித்தம் ஒரு அழுக்கைத் தேடிச் செல்லும் அப்போது நல்லோர்கள் கூட்டத்தை நோக்கிச் செல் என்கிறார். உடலுடன் சென்றாலும் சரி, மனத்தை அவர்மாட்டுச் செலுத்தினாலும் சரி, அழுக்கினின்று தப்புவாய்.

செல்வம் உண்டேல் அதன் உண்மைப் பயனை யறிந்து செலவு செய் என்கிறார். உண்மை மகிழ்ச்சி யைத் தரும் செலவு எது? தீனர்களுக்குக் கொடுத்துப் பயன்படுத்து எனகிறார். ஏழைக்குக் கொடுத்துத் துயரத்தைத் துடைப்பதிலுண்டாகும் மகிழ்ச்சியே செல்வத்திலுண்டாகும் மிகப் பெரிய மகிழ்ச்சி. பணத்தைக் கடையில் செலவழித்து அதனாலுண்டாகும் திருப்தியும் சந்தோஷங்களும் ஏழைக்கு உதவியதால் உண்டாகும் மகிழ்ச்சிக்கு ஈடாகமாட்டா. சங்கரர் பாடிய பஜகோவிநதம் இல்லறம் நடத்தும் மக்களுக்குப் பாடியது என்பதை இந்தப் பாட்டு காட்டுகிறது. "தேயம் தீன ஜனாய ச விததம்" "— பொருளை ஏழை களுக்குக் கொடுதது உதவு" —என்பது துறவிகளுக் கலல, அனைவருக்கும் சொன்னது. வாழும் வழியை முழுவதும் இந்தப் பாட்டு சுருக்கமாகச் சொல்லி விட்டது.

பகவத் கீதையைப் படி, பகவத் கீதையைப் பாடு என்கிறார் சங்கரர். கூடவே பகவானுடைய ஆயிர நாமங்களைப் பாடு என்கிறார். இந்த இரண்டையும் சேர்த்து உபதேசத்தின் பொருளை உணரவேண்டும். பாண்டித்தியம் அடைவதற்கென்று படிக்கும் படிப்பு உதவாது. பகவானுடைய திருநாமங்களைப் பாட வேண்டுமானால் உள்ளத்தில் ஈசுவர பக்தி இருக்க

வேண்டும். கொஞ்சம் இருந்தாலும் அது வர வரப் பெரிதாக வளரும்.

ஒரு நூலைப் படித்தால் பக்தியோடு படிக்கவேண்டும். பக்தி இல்லாவிட்டால் நூலின பொருளை அறிய முடியாது. கோயிலுக்குள் செல்லும்போது செருப்பை வெளியே வைத்து உள்ளே போகவேண்டும் அல்லவா? அதுபோல் பெரியோர்கள் எழுதிய சாஸ்திரங்களைப் படிக்க ஆரம்பிக்கும்போது குற்றம் பார்க்கும் இயல்பை ஒழித்துக் கொண்டு பக்தியுடன் ஆரம்பிக்கவேண்டும். பக்தியுடன் கீதையைப் படித்தவர்கள் அதில் பெரும் பொருள் காண்பார்கள். பக்தியில்லாத ஆராய்ச்சிப் படிப்புக்காரர்கள் அதில் கலவரமும், குழப்பமும், சொன்னதையே சொல்லும் எழுத்து நடைக் குற்றமுமே காண்பார்கள். கவனமாகப் படித்தால் சம்ஸ்கிருத ஞானம் உண்டாகும்; அவ்வளவே. பக்தியில்லாத வெறும் படிப்பால் வாழ்க்கைக்குப் பயன் ஒன்றும் உண்டாகாது; படிக்கும்போது பக்தியுடன் படித்தால், 'படித்துவிட்டேன், நான் ஒரு பண்டிதனுய் விட்டேன்' என்கிற கர்வம் உண்டாகாது. அடக்கமும் அன்பும் ஆனந்தமும் உண்டாகும்.

சுருக்கமாக கீதையின் உபதேசம் என்னவென்பதைச் சொன்னுல் பஜகோவிந்தம் பாட்டின் முழுப் பொருளும் விளங்கும். கீதை முதல் பாகத்தில் உடலின் மோகத்தை பகவான் கீதாசாரியன் விளக்குகிறுன். உடலும் உயிரும் ஒன்றிலொன்று ஊடுருவிக் கலந்து நிற்பதால் அந்நிலையில் 'நான்' என்னும் ரகசியப் பொருள் என்ன என்பது நமக்கு விளங்குவதில்லை. உடலும் தானும் ஒன்றே என்று மனிதன் நினைக்கிறுன். மகிழ்ச்சியும் திருப்தியும் உண்டு களிப்பதிலேதான்

என்று எண்ணுகிறோம். இது தவறு என்பது கீதையின் முதல் உபதேசம். புலன் வழியில் அடையும் மகிழ்ச்சிக்கு முடிவு சீக்கிரம் அது அநேகமாகத் துக்கத்தில் முடியும். திருப்தி என்பது எப்போதும் கிடையாது. இதை உணர்ந்துகொண்டு புலன் வழி உண்டாகும் மகிழ்ச்சிகளைப் பெரிதாக நினைக்காமல் சித்தத்தில் சம நிலையை அடைய முயல்வாயாக. அதுவே உண்மை ஆனந்தம் என்று முதலில் கண்ணன் உபதேசம். உடலானது மனிதன் உடுத்தும் துணியைப் போன்றது. அது கிழிந்தும் நைந்தும் போனால் வேறு உடை உடுத்துவது போல் உயிரானது ஒரு உடல் அழிந்ததும் வேறு உடலில் புகும். மரணம் என்பது ஆன்மாவின் முடிவல்ல; உடுத்தும துணியைப் போல் உடலை மதிப்பாய். 'நான்' என்று நாம் பேசும் பொருளுக்குச் சாவில்லை, அது சாசுவதமான ஒரு பொருள் என்று உபதேசித்துவிட்டு, பிறகு நல்வாழ்க்கையைப் பகவான் உபதேசிக்கிறான். சாஸ்திரங்களில் புகழப்பட்ட துறவு மார்க்கத்தின் உண்மையான தத்துவத்தை விளக்குகிறான்.

உயிர்பெற்ற ஜீவன் சும்மா இருக்க முடியாது. சுபாவத்தின் பயனாகச் செயலில் புகுந்தே தீரும். ஆனபடியால் சாஸ்திரத்தில் சொல்லப்பட்ட துறவு என்பது ஆசையைத் துறப்பதே ஒழியச் செயலைத் துறப்பதல்ல. செயலனைத்தையும் துறக்க முடியாது. சிற்றின்பமும் சுயநலமும் துறந்து வாழ்க்கை நடத்துவதே சாத்தியமான துறவு மார்க்கம். எல்லாச் செயலும் பகவானுக்குச் செய்யும் தொண்டு என்று பாவித்துச் செய். அதுவே துறவு என்கிறான் கண்ணன்.

"அற்றவர் என்பவர் அவர் அற்றார்"

என்று குறளாசிரியரும் விளக்கமாகச் சொன்னார்.

பற்றுக்களைத் துறப்பதே துறவு. உனக்கென்று ஏற்பட்ட செயலைத் துறக்கப் பார்க்க வேண்டாம். செய்வதையெல்லாம் கடமை நிறைவேற்றுவதற்காகச் செய்ய வேண்டும். சுயநலப் பற்றுக்கள் ஒழித்துச் செய்ய வேண்டும். அதுவே அனைவரும் பின்பற்றக் கூடிய உயர்ந்த சந்நியாசம். இதுவே கீதையில் ஊர்ஜிதமாகச் செய்யப்பட்ட உபதேசம்.

பாலில் உள்ள சத்து நெய். அதுபோல் சந்நியாசத்தினுள் நெய் பாகம் அதிலடங்கிய பற்றறுத்தல்; செயலின்மையல்ல. செயலைத் துறக்கப் பார்ப்பது வீண். ஆசையும் பற்றும் ஒழிய வேண்டும். அதற்காக முயல்வாய். "லோக சங்கிரகம்," அதாவது சமூக நன்மைக்காக உன் கடமைகளைச் செய்வாய். சுய நலத்தைத் துறந்து செய்வாய். உன் செயல்களை யெல்லாம் சுவாமிக்கு அளிக்கும் நைவேத்தியமாகக் கருதிச் செய்து முடிக்கவேண்டும் என்பது கீதையின் சாராம்சம்.

மனிதன் செயலெல்லாம் பிறப்புடன் வந்த சுபாவங்களின் பயன். அந்தச் சுபாவ குணங்கள் தம் பாட்டுக்கு வேலை செய்யும். சுபாவ குணங்களை அறவே புறக்கணித்துவிடும் முயற்சி வீணாகும். அவற்றை நல்வழியில் செலுத்துவதே மனிதன் செய்யக்கூடிய முயற்சி.

ஆசை என்பது பல வேஷங்கொண்டு உள்ளத்தைக் கவர்ந்து கொள்ளும். ஒரு கோட்டையைக் காப்பதுபோல் உள்ளத்தைக் காக்கவேண்டும். விரோதி, அதாவது ஆசை உள்ளே பிரவேசித்து அந்தக் கோட்டையைப் பிடித்துக்கொண்டுவிட்டால் பிறகு எல்லாம் கெட்டுப் போகும். ராஜதானியை எதிரி பிடித்துக்கொண்டபின் தேசம் முழுதும் அவன் வச

மாகிவிடுமல்லவா? உள்ளமே ராஜதானி. ஆனபடி யால் உள்ளத்தைக் காப்பாய் என்று கீதையில் அழுத்த மாக உபதேசிக்கப்படுகிறது.

மனிதனுடைய சத்ரு ஆசை. அது உள்ளே நுழை யாமல் மனம் என்ற ராஜதானியைக் காக்கவேண்டும். காத்தால் பிறகு எல்லாம் க்ஷேமமாக இருக்கும். இது கிருஷ்ணபகவான் அர்ச்சுனனுக்குச் சொன்ன மிக முக்கியமான உபதேசம்.

பற்றுக்களை எப்படி ஒழிப்பது? அதற்கு என்ன உபாயம்: திருவள்ளுவனார் சொன்னார்:

> பற்றுக பற்றற்றான் பற்றினை, அப்பற்றைப்
> பற்றுக பற்று விடற்கு.

"பற்றற்றான்" என்றால் பகவான். உள்ளம் உருகி அவனை இறைஞ்சி வேண்டிக்கொண்டால் எல்லாச் சக்தியும் உண்டாகும். ஒழிக்கவேண்டிய பற்றுக்களி னின்று விடுபடுவதற்குச் சிறந்த ஒரு பற்று உண்டு. அது ஆண்டவன் அடியைப் பற்றுதலே. அந்தப் பற்றைக் கொண்டு மற்ற பற்றுகளை ஒழிக்கலாம்.

கடவுள் பக்தியே உலகப் பற்றுக்களை ஒழிப்பதற்கு உதவும்படியான உயர்ந்த சாதனம். அதுவின்றிப் பற்றுக்களையும் ஆசைகளையும் ஒழிக்கப் பார்ப்பது வீண் முயற்சியாகும். ஆண்டவன் திருவடியைச் சிக்கெனப் பிடிப்போம்; பிடித்தால் மீள்வோம் என்பது திருவாசக உபதேசம்.

## 28

எல்லா மோகங்களையும்விட மக்களை மிகவும் மோசம் செய்யும் தன்மையது காமக் கலவியின்ப சபலம். தேகத்தில் அமைக்கப்பட்டிருக்கும் இந்த

கிராம்ய வேகம் நெருப்பின் வேகத்துக்குச் சமமாக வேலை செய்கிறது. அடக்கி ஆண்டால் நெருப்பைப் போலவே இது பயன் தரக்கூடிய வேகமும் ஆகும். அடக்காமல் விட்டால் நெருப்பைப் போலவே அழித்து சர்வநாசம் செய்யும் வேகமும் ஆகும்.

அனைத்துக்கும் ஆதியும் காரணமுமான முதற் பொருள் இரண்டற ஒன்றேயாக நிற்கும் ஒரு மெய்ப் பொருள்—பல பொருள்களாகப் பிரிந்து உலகம் என்னும் விசித்திரமாக நிற்கிறது. பலவாகப் பிரிந்து நிற்கும் பொருள்கள் மறுபடி ஒன்றுசேரச் சதா காலமும் முயன்று வருகின்றன. இதுவே விஞ்ஞான பண்டிதர்கள் சோதித்து விளக்கி வரும் பல ஆகர்ஷண சக்திகள். மக்களை ஆட்டும் பலவித பற்றுகளும் இதுவே.

காற்றும் நீரும் இன்னும் பல்வேறு திரவப் பொருள்களும் கட்டிப் பொருள்களும் இவையனைத்தும் ஒன்றினின்று பலவாகப் பிரிந்து மறுபடி ஒன்றுசேர ஆசைவேகம் கொண்டு நிற்கின்றன. காட்டில் உலர்ந்து போன செடிகளும் புல்லும் புதரும் எங்கும் பரவி நிற்கும் அனல் வாயுவுடன் எப்போது ஒன்று சேருவோம் என்று காத்திருக்கின்றன. சந்தர்ப்பம் நேர்ந்தபோது சேர்ந்து காடு தீப்பற்றி எரிந்துவிடுகிறது. பிரிந்த பலவிதப் பொருள்கள் மறுபடியும் ஒன்று சேருவதே உயிர் என்னும் வேகம். மூச்சில் நாம் உள்ளிழுத்துச் செலுத்துகிற பிராண வாயு உடலின் ஊனுடன் ஒன்றாகக் கலந்து தேகத்தை எரித்துவிடுகிறது. அதுவே உடலின் உஷ்ணம். சுட்ட சுண்ணாம்புக் கல்லும் நீரும் சேர்ந்தபோது உண்டாகும் உஷ்ணத்தை யாரும் அறிவார். ரசாயன சக்தி அவ்வளவும் ஒரு பொருள் பலவாகப் பிரிந்து நிற்கும் நிலையிலிருந்து

மறுபடி ஒன்று சேரும் வேகமேயாகும். உடலில் ஒரு காயம் ஏற்பட்டால் மறுபடி சதையும் தோலும் ஒன்று சேர்ந்து புண் ஆறுவதும் இந்த வேகமே.

இதைப்போலவே தாய்க்கும் தாயின் உடலினின்று பிரிந்த குழந்தைக்கும் உள்ள சேர்க்கை. இரு உயிர்கள் ஒன்ருக விரும்பும் வேகம்தான் நட்பு, அன்பு விருப்பம் என்று நாம் அனைவரும் பலவிதமாக அனுபவிக்கும் ஆனந்தம். முற்றிலும் ஒன்ருன பின் வேற்றுமையு மில்லை. அன்புமில்லை, உயிருமே இல்லை. சக்தியின் வேகம் தீர்ந்துபோன உயிரற்ற நிலை. ஒன்ருக எத்தனிக்கும் விருப்பமாகிய இடைநிலை வேகமே ஆனந்தம் தரும் உயிர்நிலை.

ஆணுக்கும் பெண்ணுக்குமுள்ள ஆகர்ஷண வேக மும் இந்த விசுவ குணத்தின் ஒரு தோற்றம். அது மகாசக்தி வாய்ந்த இயற்கை வேகம். கரியும் வாயுவும் சேர்ந்து எரிந்தால் இரும்பும் கரையும். அவ்வித வேகம் காதல் வேகம்.

இந்த இயற்கை வேகத்தை அடக்கி ஆண்டால் அதுவே இல்லறம். ஆனந்தம், தருமம், அர்த்தம் அனைத்தும் அதனின்று விளையும். மனையில் நெருப் பைக் கொண்டு சமைத்து உண்டு வாழ்கிருேம். அதே நெருப்பு வரம்பு தாண்டினுல் வீட்டைப் பொசுக்கி நாச மாக்கிவிடும். ஆற்று வெள்ளத்தை மடக்கி நியமித்த வாய்க்கால்களில் செலுத்தி வயல்களுக்குப் பாயவிட் டால், நீரும் விதையும் மண்ணும் சேர்ந்து பயிரும் செழிப்பும் சுகமும் அதனின்று உண்டாகும். அவ்வா றின்றி வெள்ளத்தைத் தன்போக்கில் பெருகவிட்டால் வயல்களைப் பாழ்படுத்தி நாசமாக்கும். அதைப் போலவே இயற்கை வேகங்களில் ஒன்ருன ஆண் பெண்

ஆகர்ஷண சக்தியும். அடக்கி ஆண்டால் இல்லற சுகம். அடக்கி ஆளாமல் இஷ்டம் போலப் பாய விட்டோமானல் சர்வ நாசம் நிச்சயம்.

இல்லற வாழ்வு என்பது ஆற்று வெள்ளத்தை வயலில் பாய்ச்சி, பயிரெடுத்துச் சுகம் பெறுவது போலாகும். நெருப்பை அடக்கி ஆண்டு பலவிதத்தில் பயன் பெறுவது போலாகும். ஆகர்ஷண வேகத்தை அடக்கியாளாமல் தோன்றியவாறு விட்டோமானல் அது ஊரைப் பாழாக்கித் தள்ளும். கூடாவொழுக்கம் இன்பத்துக்கு வழிபோல் தோற்றம் காட்டி மோசம் செய்து, வாழ்க்கையை நாசம் செய்யும் என்பதைத் தமிழ் நூல்களில் பெரியோர்கள் வெகு தெளிவாய்க் காட்டியிருக்கிருர்கள். ஆயினும் நூல் களைப் படித்து மனிதன் அறிவு பெறுவது கடினம். இயற்கைவேகம் அறிவைத் தோற்கடித்து விடுகிறது. சங்கரர் சொல்லுகிருர்.

மண்ணுலகத்தில் சாவதென்பதுறுதி—இதைக்
கண்ணுரக் கண்டும் ஐயோ பாபத்தை விடாரே!
எளிதென்றே தோன்றும் பொது மகளிர் போகம்
அழியாத் துயரம் அறியாயோ பின் வரும் ரோகம்.

सुखतः क्रियते रामाभोगः
  पश्चाद्धन्त शरीरे रोगः।
यद्यपि लोके मरणम् शरणम्
  तदपि न मुञ्चति पापाचरणम् ॥ 28

ஸுகத கீரியதே ராமா போக:
  பஸ்சாத் ஹன்த்த சரீரே ரோக:
யத்யபி லோகே மரணம் சரணம்
  ததபி ந முஞ்சதி பாபாசரணம்.

வாழ்க்கையில் மகிழ்ச்சி தரும் விஷயங்கள் எத்தனையோ இருக்கின்றன. அவற்றில் மனத்தைச் செலுத்திக் காலங் கழிக்கப் பயில வேண்டும். புண்ணியமும் பயனும் மகிழ்ச்சியும் கலந்த துறைகளில் தினசரி வாழ்க்கையில் உள்ளத்தைச் செலுத்திச சந்தோஷம் அடைந்து வந்தால் கிராமியக் கல்வி போகத்தில் புத்தி அதிகமாகச் செல்லாது. எல்லாம் பழக்கத்தைப் பொறுத்து நிற்கிறது. பெண்களோடு கலந்து பேசி உறவாடி வந்தாலும் இனை விழைச்சுப் புலனை அடக்கி உடலை மறந்துவிட்டு, அவர்களின் கூட்டுறவை நல்ல முறையில் அனுபவிக்கக் கற்றுக்கொள்ள வேண்டும். நம்முடைய அன்புக்குப் பாத்திரமான தாய். சகோதரி, மகள் முதலியவர்களோடு பேசி விளையாடி நாம் மகிழ்ச்சி யடையவில்லையா? நண்பர்களுடன் கலந்து மிக மகிழ்வ தில்லையா? அவ்வாறே பெண்களுடன் கலந்து, கிராமி யத்தை மறந்து, உயர்தரப் பான்மையில் மகிழ்ச்சி அடையப் பயில வேண்டும். இதுவே நல்ல பண்பாடு.

இந்த விஷயத்தில் மேல் நாட்டாரின் நடவடிக்கை களிலிருந்து நாம் ரொம்பக் கற்றுக்கொள்ளலாம். மொத்தத்தில் நம்மைவிட அவர்கள் இந்த யோகத்தில் சித்தியடைநதிருக்கிறார்கள். ஆணும் பெண்ணும் தத்தம் தேக தருமத்தை மறப்பது ஒரு யோக முறையே என்று சொலவது மிகையாகாது. ஆணும் பெண்ணும் ஒருவரையொருவர் நெருங்கிய உடனே நம்மவாகளுடைய எண்ணம தேக தருமத்தில் சென்று விடுகிறது. அத்தகைய அடங்கா வேகம மேல் நாட் டாரில் அநேகமாக இலலை. ரொம்பக் குறைவு. இதறகுக் காரணம் சீதோஷண நிலை என்பார்கள். இந்தச சமாதானத்தை நான ஒப்புக் கொள்ளவிலலை.

நம்முடைய பயிற்சியும் பண்பாடும் வித்தியாசப்படு கிறது. இதுதான் முக்கியமான காரணம். பல விதங்களில் இன்பம் பெறுவதற்கு வழியிருக்கக் கேவலம் தேகக் கல்வி ஒன்றையே வைத்துக்கொண்டு பைத்தியம் பிடித்துக் கெட்டுப் போகிறோம்.

படிப்பு, பாட்டு, சித்திரம், ஆட்டம், கேளிக்கை, கூத்து, பேச்சு, ஹாஸ்யம், அழகான ஆறு, மலை, தோப்பு, வானம் முதலிய இயற்கைச் சௌந்தர்யங் களும் இன்னும் எவ்வளவோ அனுபவிக்கக் கூடியவை களும் உலகத்தில் இருக்க அவற்றைப் பயன்படுத்திக் கொள்ளாமல் பயனற்ற ஒரு பைத்தியக்கார விஷயத்தையே பேரின்பமாக வைத்துக்கொண்டு அலைந்து உடலையும், உள்ளத்தையும், பேச்சையும், எழுத்தையும், தமிழையும் கெடுத்துக் கொள்ளுகிறோம். மகிழ்ச்சி யுலகத்தைச் சுருக்கிக் கொண்டு சுகமடை யாமல் வாழ்கிறோம். தரும முறையிலும் கஷ்ட மில்லாமலும் சம்பாதிக்கக் கூடிய இன்பங்களை விட்டு விட்டுப் பழியும் பாவமும் கலந்த சிற்றின்பத்தைத் தேடி வருந்துகிறோம். எல்லாம் உள்ளத்தைச் செலுத் தும் சாமர்த்தியத்தில் இருக்கிறது. வேறு துறைகளில் மனத்தைச் செலுத்தினால் பழியினின்றும் பாவத்தி னின்றும் தப்புவோம். மனத்தைக் கெட்ட விஷயங் களில கொஞ்ச நேரம் தங்க இடம் கொடுத்தாலும் அது நம்மைக் கவ்வி, பள்ளத்துக்கு இழுத்துக் கொண்டு போய்விடும். அனைவருக்கும் தெரிந்ததையே சங்கரரும் பாடினார்; நானும் வருத்தத்துடன் சொல்லுகிறேன்.

## 29

கல்விச் சுகத்தைத் தேடிக் கெட்டுப் போவதைச் சுருக்கமாகச் சொல்லிவிட்டு அடுத்தபடியாகப் பண

ஆசையைப் பற்றிச் சங்கரர் சொல்லுகிறார். இந்த விஷயத்தைப் பற்றி முதலிலேயே வந்த இரண்டாவது பாட்டை நினைவில் வைத்துக்கொண்டு இந்த 29-வது பாட்டைப் படிக்க வேண்டும். அந்தப் பாட்டில் சொன்னது 'சொந்தத்தில் பாடுபட்டு உண்டாகிய பொருளைக்கொண்டு வாழ்க்கை நடத்து; சுகம் பெறுவாய். இன்னும் பணம், இன்னும் பணம் என்கிற ஆசையை நீக்கிக்கொள்; பணத்தால் சுகமடைய மாட்டாய், அது ஒரு தீராத தாகம்' என்றார்.

மூட ஜஹீஹி தனாகம் த்ருஷ்ணாம்
குரு ஸதபுத்திம் மனஸி விதருஷ்ணாம்
யல் லபஸே நிஜகர் மோபாத்தம்
வித்தம் தேன விநோதய சித்தம்.

பண ஆசையைப்பற்றி இப்போது கடைசியாக மறுபடியும் சங்கரர் சொல்லுகிறார்.

வியர்த்தம் பணம் பணமென்றலைவது
அர்த்தம என்பது அனர்த்தமே காண்
எள்ளளவும் சுகமில்லை பணம் சேர்ந்த பாவிக்கு
கள்ளனை மட்டுமல்ல பெற்ற மகனையு மஞ்சுவான்
சந்தேகமில்லை உண்மை இது அறிவாய்
எந்த ஊரிலுமிது பணத்தின கதியாகும்.

अर्थमनर्थं भावय नित्यम्
नास्ति ततः सुखलेशः सत्यम् । 29

पुत्रादपि धनभाजाम् भीतिः
सर्वत्रैषा विहिता रीतिः ॥

அர்த்தமனர்த்தம பாவய நித்தியம்
நாஸதி ததஸ் ஸுகலேசஸ ஸத்யம்
புத்ராத் அபி தனபாஜாம் பீதி:
ஸர்வத்ரைஷா விஹிதா ரீதி:

எதிலாவது சுகம் பெறலாம்; பணம் சேர்ப்பதில் ஆசை செலுத்திச் சுகம் அடையமாட்டோம். வாழ்க்கைக்கு வேண்டியதற்காகச் சொந்தமாகப் பாடுபட்டுச் சம்பாதித்துப் பெறுவதற்கு ஆட்சேபணையில்லை. ஆனால் பணம் சேர்ப்பதிலேயே ஒரு தனி ஆசை உண்டாக்கிக்கொண்டு அதற்காக அலைவதை சங்கரர் வேண்டாமென்கிறார்; அதைப் பற்றியும் லௌகீக நியாயமே சொல்கிறார். சேரச் சேர ஆசை பெருகிக் கொண்டே போகும். அதனால் துயரமே யொழியச் சந்தோஷம் கிடையாது. அதுவே யன்றிச் சேர்த்து வைக்கும் சொத்தைப்பற்றி அதன் கூடவே கவலையும் வளர்ந்துகொண்டே போகும். திருடனையும் மோசக்காரர்களையும் அஞ்சுவது மட்டுமல்ல; பெற்ற மகனுங் கூடப் பணம் சேர்த்த பாவிக்குச் சத்துருவாகி விடுகிறான்; பயத்துக்குக் காரணமாகி விடுகிறான்.

மகன் என்றால் உதாரணமாகச் சொன்னது; நெருங்கிய பந்துக்கள் அனைவரும் பயத்துக்குக் காரணமாகி விடுகிறார்கள். இயற்கை அன்பு சேதப்பட்டுப் போகிறது. எந்தத் தேசத்திலும் இதுவே நடைபெறுகிறது. இத்தகைய ஒரு விஷயத்தை ஏன் தேடியலைவது? விட்டுத் தள்ளுங்கள் என்று கூறுகிறார்.

''தேயம் தீன ஜனாய ச வித்தம்''

என்று 27வது பாட்டில் சொன்னார். பணம் இருந்தால் அதை ஏழைகளுக்குக் கொடுத்து அந்த விதத்தில் மகிழ்ச்சி அடை. பணத்தைப் பிறருக்குக் கொடுப்பதில் தான் பெரு மகிழ்ச்சி இருக்கிறது. பணத்தைக் கெட்டியாகக் கட்டிக்கொண்டு, லோப குணத்தைப் பெருக்கிக் கொண்டு, துக்கத்தையும் கவலையையும் பகையையும் பெருக்கிக் கொள்ளாதே என்று கூறுகிறார்.

அர்த்த சாஸ்திரத்தை நன்றாகப் பயின்றவர்கள் லோப குணத்தை விலக்குவார்கள். பணம் என்பது ஒரு சாதனப் பொருள். அதுவே ஒரு சுகமன்று. முடிவு மன்று. அவரவர்களுக்கு ஒரு வரம்புண்டு. அந்த வரம்புக்கு மேல் மிஞ்சினபின் செல்வம் ஒரு பாரமும் கவலையுமேதான்.

நாம் கோருவது சுகம். இதை மறந்துவிட்டுக் காகிதத்தில் எழுதிய பணத்தின் கணக்கே சுகம் என்று கற்பனை செய்துகொண்டு அதற்கு அடிமையாய்ப் போகிறோம்! முன்காலத்திலாவது பணம் என்பது தங்கம் வெள்ளியாக இருந்தது. கை நிறைய எடுத்து அள்ளும் பான்மை கொண்டதாக இருந்தது. அள்ளியும் எண்ணியும் மடையர்கள் இன்பம் அடையலாமாக இருந்தது. இக்காலத்தில் அதுவும் இல்லை. அள்ளி எண்ணி ஆனந்தப்படுவதற்குக்கூட இடம் இல்லை. 'உன் பணம் வெறும் அச்சடித்த காகிதம். அதுவுமில்லை, பாங்கியில் வேறொருவர் அனுபவித்து வரும் பொருளின் கணக்கு மட்டுமே நீ பார்த்துத் திருப்தி அடைவது. முடிவில் இரண்டு மூங்கில் கட்டை மேல் படுத்து மறையப் போகிறாய். கூடப் பணம் வராது. நீ இறந்த பின் கணக்குகளைப் பற்றி உன் மக்கள் ஒருவரோடு ஒருவர் சண்டை இடுவதை நீ காணமாட்டாய். ஆனால் சண்டை இடுவது நிச்சயம். இதையெல்லாம் அடக்கிச் சுருக்கமாக "அர்த்தம் அனர்த்தம்" என்கிறார்.

'இதுவெல்லாம் பழைய கதை' என்பீர்கள். யாரும் 'ஒப்புக்கொள்ள மாட்டார்கள்' என்பீர்கள். ஆனால் ஒப்புக்கொள்ளாத காரணத்தினால் 'கண்ட உண்மையானது பொய்யாகாது. சங்கரர் சொல்லுவது பொய்

யல்ல. அர்த்தம் என்பது அனர்த்தம். இதைத் தினமும் சிந்தனை செய்வோம். பணம் சேர்ப்பதில் சுகம் இல்லை; கவலைதான். அதை ஏழைக்குத் தந்து சுகம் அடைவோம்.

பணத்தை என்னத்துக்காகச் சேர்த்து வைக்கிறாய்? 'மகன் ஒன்றும் அறியாத அப்பாவி, அல்லது மகள் அநாதை, அவளுக்கு ஆதரவாக இருக்கும் எனக்குப்பின்' என்று எண்ணலாம். உலகத்தின் போக்கு அறியாதவர்கள் இவ்வாறு சமாதானம் சொல்லுவார்கள். பணம் பெற்ற அநாதையர்களை விசாரித்தால் தெரியவரும் இந்தச் சமாதானத்தில் எவ்வளவு உண்மையிருக்கிற தென்பது. சொத்து அடைந்த அப்பாவியை எவ்வளவு மோசக்காரர்கள் உடனே சூழ்ந்துகொண்டு பணத்தையும் ஆளையும் பாழ்படுத்துகிறார்கள் என்பது விசாரித்தால் தெரியும். பணம் சேர்த்து வைத்து மறைந்து போவதால் எல்லாம் சாதித்துவிட்டதாக எண்ணுவது மோகம்; உலக அனுபவத்துக்கு விரோதம்.

பொருளைத் தேட வேண்டாம் என்று அல்ல ஆசாரியர் சொன்ன உபதேசம். அதனால் எல்லாம் சாதித்துவிட்டோம் என்று மோகம் கொள்ளாதே— அதற்காக உயிரைப் பாழ்படுத்திக் கொள்ளாதே— பற்று வளர்த்துக் கொள்ளாமல் செய்ய வேண்டியதைச் செய். லோபியாகப் போகாதே — என்பது பாட்டின் பொருள். லோபியானவன் பணத்துக்கு அடிமையானவன். லோபித்தனம் செய்யாமல் நல்வழியில் சம்பாதித்து, நல்ல முறையில் செலவு செய்து, இல்லறம் நடத்துவதை சங்கரர் ஆட்சேபிக்கவில்லை. இரண்டாவது, இருபத்தேழாவது பாட்டுக்களில்

சொன்ன விஷயங்களை நன்றாகக் கவனித்தால் இது விளங்கும்.

## 30

அகக் கோயிலைக் காப்பாய் மகனே
மிகக் கவனம் வைப்பாய்! மிகக் கவனம் வைப்பாய்
சுவாசத்தை ஒழுங்காக்கி யமர்ந்து
அவாவை யடக்கி ஐவர் மூர்க்கரை
மெய்யெது மோகமெது வென்றாய்ந்து
செய்யும் ஜெபமும் தியானமுங் கொண்டு
பையப் பையப் பயில்வாய்
மெய்ப் பொருளின் சித்தத்தை அலையாமல் நிறுத்தவே.

प्राणायामम् प्रत्याहारम्
नित्यानित्य-विवेकविचारम् ।
जाप्य समेत समाधिविधानम्
कुर्ववधानम् महदवधानम् ॥ 30

ப்ராணாயாமம் ப்ரத்யாஹாரம்
நித்யாநித்ய விவேகவிசாரம்
ஜாப்ய ஸமேத ஸமாதிவிதானம்
குர்வவதானம் மஹத் அவதானம்.

"ப்ரத்யாஹாரம்" என்றால் இழுத்துப் பிடித்தல், அதாவது அவாவை அடக்கி, ஐம்புலன்களை இழுத்துப் பிடித்தல். அடங்காக் குதிரைகளான புலன்களைக் கடிவாளம் போட்டு இழுத்துப் பிடித்து வாழ்க்கையைச் செலுத்துவது ப்ரத்யாஹாரம்.

பக்தனுடைய முக்கிய வேலை புலன்களைக் காப்பதாகும். காக்கும் சக்தி பக்தியினின்று உண்டாகும். எவ்வளவு அறிவு இருந்தாலும் புலன் காக்காத அறிவு ஞானமாகாது. கடவுளை இறைஞ்சினால்தான் ஞானம் உண்டாகும்.

புலன்களின் வேகத்தை அடக்கிஞல் அடக்கிய வெற்றியே ஆனந்தம் தரும். இதற்காகத்தான் பல சாதனங்களைப் பல ஆசாரியர்கள் சொல்லி வந்திருக்கிருர்கள். ஜபமும் தியானமும் பிரபந்தங்கள் ஓதுவதும் சங்கீர்த்தனமும், பிராணுயாமமும், விரதம் காத்தலும் இன்னும் வேறு எல்லாம் இதற்காகவே. முயற்சி செய்து உடனே நாம் வெற்றி பெற முடியாமற் போனுலும் மனம் தளராமல் மேலும் மேலும் முயல வேண்டும்.

''நீ'' என்பது தேகமல்ல உள்ளமே; ''நீ,'' தேகத்தைக் கட்டாயம் கவனிக்கத் தகும். ஆனுல் உள்ளம்தான் மிகவும் கவனிக்க வேண்டிய பொருள். அனைத்துக்கும் மூலஸ்தானம் உள்ளம். அதை மிக ஜாக்கிரதையாகக் காக்கவேண்டும். சத்துரு உள்ளே நுழையாமல் கோட்டையை அதன் காவற் படையானது தூங்காமல் காப்பது போல், விவேகமானது தூங்காமல் உள்ளத்தைக் காக்க வேண்டும். எது உண்மை, எது ஏமாற்றம், எது பொய்த்தோற்றம், எது நிலையில்லாதது, எது நிலையான சுகம் என்பதையெல்லாம் அறிவது விவேகம். பாட்டில் 'மிகக் கவனமாய்க் காப்பாய்' என்று இருமுறை சொல்லியது மனங் காத்தலின் அவசியத்தை வற்புறுத்துவதற்காக.

## 31

நம்முடைய தேகமும் உள்ளமும் ஆண்டவனுடைய கோயில். அதைச் சுத்தமாக வைத்துக் காப்பது நம் கடமை. காக்கும் வழி பெரியோர்கள் சொல்லியிருக்கிருர்கள். நேரில் உபதேசித்தும் சாஸ்திரங்கள் எழுதி அவற்றின் மூலம் பிற்காலத்துக்கும் உபதேசித்தும் வந்திருக்கிருர்கள். பெரியோர்களாகிய நம்முடைய ஆசாரியர்களை நமஸ்கரித்து ஆண்டவன் மேல் பாரம் வைத்து முயற்சி செய்ய வேண்டும்,

குருசரணும்புஜ நிர்பர; பக்த:
ஸம்ஸாராத் அசிராத் பவமுக்த:

"குருவை நம்பு, முற்றிலும் நம்பு, வாழ்க்கைத் துயரத்தினின்று விடுதலையடைவாய்" என்கிறார். இக் காலத்தில் எல்லோரும் குருவிடம் நேரில் உபதேசம் பெறுவதற்குச் சவுகரியம் இல்லை. குருவினிடம் உப தேசம் பெறும் பழக்கமும் அனேகமாய் நின்று போய் விட்டது. ஆனால் எவ்விதத்தில் ஞானம் கண்டாலும் அது குருவினிடமிருந்து வந்ததேயாகும். ஒரு புத்தகமே குருவாகலாம். ஒரு கோயில் கோபுரமே ஞானோதயத்துக்குக் காரணமாகி அதுவே குருவாக லாம். ஆனைமுக மூர்த்தி அல்லது கல்லில் வெட்டிய ஒரு அனுமான் விக்கிரகம் அல்லது வேறு பக்தி செலுத்திய ஒரு லிங்கம் ஞான உதயத்துக்குக் காரணமாக இருக்கும். ஏதாயினும் சரி. அதுவே நமக்கு குரு. அதனில் பக்தியும் சிரத்தையும் வைத்து முயன்றால் நிச்சயம் அறிவு பெறுவோம்.

மண்ணிலும் மரத்திலும் கல்லிலுமா பக்தி செலுத்துவது என்று சிலர் கேட்பார்கள். அனைத்திலும் கடவுள் இருக்கிறபடியால் உயிரற்ற பொருள்களை அசட்டை செய்வது அறியாமையாகும். உயிரற்ற பொருள்களிலுள்ள பெரும் ரகசியங்களை முற்றிலும் நாம் காணவில்லை. உயிரற்ற கல்லோடு நம் பக்தியும் கலந்து விட்டால் அதன் வேகம் மிகப் பெரியது. ஆழ்வார் நாயன்மார்களின் பாடல்களைப் பாடினோமானால் இதை நன்றாய்க் காண்போம். சந்தேகப் பட்டுக்கொண்டேயிருந்தால் மாலுமியில்லாத படகைப் போல், கடலில் அலைந்து காற்றில் அடிபட்டுக் கெடுவோம்.

பஜகோவிந்தம் கடைசிப் பாட்டு:

குருவின் பாதகமலத்தில் குறையாதபக்தி வைப்பாயேல்
பிறவிச் சிறையினின்று துரிதம் மீள்வாய் உறுதி,
புலனும் மனமும் ஒழுங்குபட்டால் காண்பாய் உன்
னுள்ளத்திலேயே
உலகத்தையாளும் ஈசனுடைய ஒளிமய உருவத்தை:

गुरुचरणाम्बुजनिर्भरभक्तः
संसारादचिराद्भवमुक्तः ।
सेन्द्रियमानसनियमादेवम्
द्रक्ष्यसि निजहृदयस्थम् देवम् ॥ 31

குருசரணும்புஜ நிர்பர பக்த:
ஸம்ஸாராத் அசிராத் பவமுக்த:
ஸேந்திரிய மானஸ் நியமாத் ஏவம்
திரிக்ஷ்யஸி நிஜஹ்ரி தயஸ்தம் தேவம்.

‘‘பழங்குடில் தொறுமெழுந் தருளிய பரனே?’’ என்று பாடினுர் மாணிக்கவாசகர். பழங்குடில் என்றது நம்முடைய சீர்கெட்ட இதயம். அதனில் குடியிருக்கிருன், பரமேசுவரன். வேறு எங்கேயும் கஷ்டப்பட்டுத் தேட வேண்டியதில்லே.

ராமகிருஷ்ண பரமஹம்ஸர் சொன்ன கதை ஒன்று உண்டு. காட்டுக் கொட்டகையில் படுத்திருந்த ஒரு குடியானவனுக்குத் தூக்கம் விழித்துச் சுருட்டுப் பிடிக்க வேண்டுமென்று எண்ணம் தோன்றிற்ரும். நடு இரவில் அடுத்த வயலில் தன் நண்பன் கொட்டகைக்குப் போய், ‘‘அண்ணே! அண்ணே!’’ என்று அவனே எழுப்பினுன். அவனும் எழுந்து வெளியே வந்து, என்ன விஷயம் என்ருன்.

‘‘ஒரு நெருப்புக்குச்சி தருவாயா? சுருட்டுப் பிடிக்க ஆசையாக இருக்கிறது’’ என்ருன்.

‘‘பைத்தியக்காரா! கையில் லாந்தர் பிடித்து வந்திருக்கிருய். அதை மறந்துவிட்டு நெருப்புக்கு நள்ளிரவில் என்னிடம் வந்தாயே; உன் லாந்தரில் சுருட்டு பற்றவைத்துக் கொள்வதற்கென்ன?’’ என்று தூங்கி எழுந்த குடியானவன் சொன்னுன்.

‘‘அப்படியா; மறந்துவிட்டேன், லாந்தர் இருக்க உன்னண்டை ஏன் வந்தேன்?’’ என்ருன் முதல் குடியானவன்.

கையில் பிடித்த லாந்தரைப் போல், நம் உள்ளத்தில் ஆண்டவன் இருக்க இங்குமங்கும் தேடி அவனைக் காண வேண்டி அலைகிறோம். உள்ளத்தில் இருக்கும் விளக்கைத்தான் சங்கரர் கடைசிப் பாட்டில் சொல்லுகிறார். ‘‘நிஜஹ்ருதயஸ்தம் தேவம்’’ என்றால் உன்னுடைய இதயத்திலேயே இருக்கும் ‘செந்தழல் புரை திரு மேனியன்’, ஒளிமயமான ஈசன். உன் புலன்களையும் உள்ளத்தையும் வசமாக்கி நல்வழியில் வாழ்ந்து பக்தி செய்தாயானால் வேறொன்றும் வேண்டாம். அதனாலேயே ஜோதி உருவத்தை உனக்குள்ளேயே நீ காண்பாய் என்று பாடி சங்கரர் பஜகோவிந்தத்தை முடிக்கிறார்.

கோவிந்தனை வந்தித்தால் புலன் காத்தலில் வெற்றி பெறுவோம்.

மனித சமுதாயம் கூட்டுறவுத் தத்துவத்தின் ஆதாரத்தைக் கொண்டு நிற்கிறது. கூட்டுறவின் நியமமே தருமம் என்பது. ஆசையும் பாவமும் மக்களைப் பிடித்துக் கொண்டால் அந்தக் கூட்டுறவு தருமம் கெட்டுப் போகிறது. மக்கள் ஒருவரையொருவர் நம்பமாட்டார்கள். ஒருவரையொருவர் கண்டு பயப்பட்டும் கவலைப்பட்டும் துவேஷித்தும் துக்கமடைவார்கள். கூட்டுறவு நடைபெறாது. அனைவரும் துயரமடைவார்கள். மனித சமுதாயத்திற்குத் தருமமும் தெய்வ பக்தியும் இன்றியமையாத மூலதனம். இதை இழந்த படியாலே பலவிதமான கஷ்டங்களை அனுபவிக்கிறோம். இதைச் சீர்படுத்துவதற்கு ஒவ்வொருவனும் செய்ய வேண்டியது என்னவென்றால், பிறரை எதிர்பார்க்காமல் தன் பாட்டுக்குத் தன் மனசாட்சி அதாவது உள்ளத்தில் காவலிருக்கும் தரும தேவதையின் எண்ணத்தின்படி நடந்துவர வேண்டும். அப்படிச் செய்துவந்தால், பிறகு சிறு துளிகள் சேர்ந்து மழையாகப் பெய்வதுபோல் தருமமும் பெருகிச் சமூகமும் நாடும் செழிக்கும்.

